475









# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 28. பொருளடக்கம். No. 2.
சித்திரபானுவு ஆவணிமீ கஉ

475 உள்ளடக்கம். பக்கம்.













# "ஆனந்தபோதினி"

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| வருடம் 1-க்கு தபாற்கூலி யுள்பட | இந்தியா, ஸிலோன் ... ... | 1—0—0 |
| | பர்மா ... ... | 1—4—0 |
| | பினங், ஸிங்கப்பூர் தென் ஆப்பிரிக்கா, பசரா, மெசபொடேமியா முதலிய வெளிநாடுகளுக்கு | 2—0—0 |
| நடந்துகொண்டிருக்கிற வருடத்திய தனிச் சஞ்சிகை விலை | | 0—2—0 |
| சென்ற வருடங்களின் தனிச் சஞ்சிகை விலை | | 0—3—0 |

**ஒரு வருடத்திற்குக் குறைந்த சந்தா கிடையாது.**

(1) சந்தாதாரராய்ச் சேருகிறவர்கள் பூரணமாகப் பெயரை எழுதி அனுப்பவேண்டும்.

(2) சந்தாத் தொகையை முன்னுடிச் செலுத்தியாவது அல்லது வி. பி. யில் பணம் கட்டியாவது பத்திரிகை பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போது சேர்ந்தாலும் அவ்வருட ஆடிமாத முதல்தான் கணக்கு வைக்கப்பட்டு ஆடிமாத சஞ்சிகை முதல், பத்திரிகை அனுப்பப்படும்.

☞ (3) சஞ்சிகையை வி. பி. யில் வரவழைப்போர் ரிஜிஸ்டர் சார்ஜ் 8-அணுவோடு (18-4-1921 முதல் மணியார்டர் கமிஷன் 10-ரூபா வரையில் 2-அணு வாகையால்) அந்தக் கமிஷன் 2-அணு, வி. பி. க்குத் தபால் சார்ஜ் 0-0-6. ஆக 0-5-6-அதாவது 6-அணு சேர்த்து ரூபா 1-6-0 கட்டி வி. பி. யைப் பெறவேண்டும். மணியார்டர் அனுப்பினுல் 1-2-0 மட்டுமே யாகும். ஆதலால் முன்னுடி மணியார்டர் அனுப்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்வதே நலம், இதைக் கவனிக்கவும்

(4) யாருக்கேனும் சஞ்சிகை சேராவிட்டால் அவர்கள் அம் மாதம் 15-ம் தேதி வரையில் பார்த்து அதற்குமேல் அதே தமிழ்மாத முடிவுக்குள் அவ்விவரத்தைத் தெரிவித்தால்தான் மறுபடி யனுப்பக்கூடும். பிறகு தெரிவிப்போர் கிரய மனுப்பிப் பெறவேண்டும்.

(5) இடம் மாறும் சந்தாதாரர்கள் அடுத்த சஞ்சிகை தங்களுக்குப் புது விலாசத்திற்கு வந்து சேரும் வண்ணம் தபாலாபீஸோடு ஏற்பாடு செய்துகொண்டு நமக்குப் புது விலாசத்தை யறிவிக்கவேண்டும். இன்றேல் அடுத்த சஞ்சிகை பெரும்பாலும் பழைய விலாசத்திற்கே போய்விடும். அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.

(6) சந்தா நம்பரைக் குறிக்காமல் எழுதும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. அத்தகைய கடிதங்களால் நேரிடும் தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளி யல்ல. பதிலை விரும்புவோர் ரீப்ளை கார்டாவது தபாற் பில்லையாவது அனுப்பினுலன்றி விடை யளிக்கப்பட மாட்டாது.

(7) வியாசங்களை எழுதுவோர் சுத்தமாக இலக்கணப் பிழையின்றித் தங்கள் உண்மைப் பெயருடன், மத தூஷணை, பிறர் தூஷணை, துரைத்தன விரோதம் முதலியவையின்றியும், பொது ஜனங்கள் விரும்பக்கூடியனவாகவும் எழுதவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| Life Subscription ஜீவிய சந்தா | இந்தியா, சிலோன் | ரூபா | 15—0—0 |
| | பர்மா, முதலிய வெளிநாடுகளுக்கு | ,, | 25—0—0 |

*Telephone* No. 3005. *Telegram*:—"Ananda Bodhini", Madras.
விலாசம்:—நா. முனிசாமி முதலியார், "ஆனந்தபோதினி"
[illegible] தெரு, [illegible] பெட்டி நெ. 167, மதராஸ்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



| தொகுதி 28 | சித்திரபானு௵ ஆவணிமீ ௧உ<br>1942௵ ஆகஸ்டுமீ 17உ | பகுதி 2 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாயில்வைத்தாய்
ஒக்க அடைக்கும்போது உணரமாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே. (1)

நீர்ஏறு செஞ்சடைமேல் நிலாவெண்திங்கள்
நீங்காமை வைத்துகந்த நீதியானே
பார்ஏறு படுதலையிற் பலிகொள்வானே
பண்டரங்கற் காய்ந்தானே பாவநாசா !
கார்ஏறு முகில்அனைய கண்டத்தானே
கருங்கைக் களிற்றுஉரிவை கதறப்போர்த்த
போர்ஏறே உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

செய்யாடி நின்மலனே நீலகண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே
மையாடு கண்மடவாள் பாகத்தானே
மான்தோல் உடையாய் மகிழ்கின்றாய்
கொய்யாடு கூவிளங் கொன்றைமாலை
கொண்டு அடியேனுனிட்டுக் கூறிநின்று
பொய்யாத சேவடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே. (3.)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) திருப்பூம்புகலூர் என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள புண்ணிய மூர்த்தியே! சிந்தனை சக்தியுடையவனாகிய நான் எம்பெருமானாகிய உன்னுடைய திருவடியைச் சிந்திப்பதல்லாமல் வேறு என்ன சொல்லி எண்ணுவேன்? உனது வீரக் கழலணிந்த திருவடிகளைக் கை கூப்பி வணங்கிக் காண்பதல்லாமல் வேறு கண் பார்வை யில்லாதவன்; மற்றொரு துணை இல்லாதவன்; ஒரு தேகத்திலே நவ துவாரங்களை வைத்தாய், அவை ஒருங்கே அடைக்கும்போது ஒன்றையும் உணரமாட்டேன்; ஆதலால், புண்ணிய மூர்த்தியே! உன்னுடைய பாதபத்மங்களைத் தஞ்சமாக அடைகிறேன். (எ-று.)

'புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐமேலுந்தி அலமந்த போதாக அஞ்சேல் என வருபவன் சிவபெருமானே' என்று திருஞான சம்பந்த சுவாமிகள் அருளியிருப்பது 'ஒண்ணுளே ஒன்பது வாயில் வைத்தாய், ஒக்க அடைக்கும்போது உணரமாட்டேன்' என்ற அடியுடன் ஒப்பிட்டு நோக்கத் தக்கது. (1)

(இ-ள்.) திருப்பூம்புகலூர் என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள புண்ணியமூர்த்தியே! கங்காநதி பாயும் சிவந்த சடாபாரத்தின் மீது நிலவு வீசும் வெண்திங்களையும் நீங்காது வைத்துகந்த நீதி சொரூபனே! சகல லோகங்களும் இடங் கொள்ளக்கூடிய தலையோட்டில் பிச்சையேற்று உண்ணும் பிக்ஷாடனனே! முன்னொரு சமயம் அரங்கநாதனும் மகா விஷ்ணுவைக் கோபித்தவனே! பாவத்தை நாசஞ் செய்யும் பரமனே! கருமேகம் போன்ற திருநீலகண்டனே! கரிய திதிக்கையையுடைய யானையின் தோலைக் கதறும்படியாக உரித்துப் போர்த்த போர்க்குணம் படைத்த ஆண் சிங்கமே! உன்னுடைய திருவடிக் கமலங்களை அடைக்கலமாக அடைகிறேன். (எ-று.)

இப் பாடலில் சிவபெருமானது திருவிளையாடல்களில் சில விவரிக்கப் பட்டிருக்கிறது. (2)

(இ-ள்.) திருப்பூம்புகலூர் என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள புண்ணியமூர்த்தியே! நெய் பால் தயிர் ஆட்டுகப்பவனே! மலரகிதனே! திருநீலகண்டனே! பூரணத்தன்மை வாய்ந்தவனே! வேத நான்கினும் வல்லவனே! நீதிபதியே! மைபூசிய கண்களையுடைய பார்வதி தேவியை வலப்பாகத்தில் கொண்டவனே! அழகிய மான்தோலை ஆடையாகத் தரித்து மகிழ்ந்து நிற்பவனே! கொய்து ஆடுங் கூவிளங்கொன்றைப் பூமாலையை அடியேன் எடுத்துக்கொண்டு வந்து அணிந்து துதி கூறிநின்ற மெய்ப்பொருளாய் விளங்கும் சிவந்த திருவடிகளையே தஞ்சமாக அடைகிறேன்; (எ-று.)

அன்பால் தன்னை வந்தடைபவர்களுக்கு அருளுவதில் சிறிதுந் தவறாத தன்மை வாய்ந்தது சிவபெருமான் திருவடி யாதலால், "பொய்யாத சேவடி" என்று திருவடிப் புகழ்ச்சி கூறினார். (3)

---




## இயேசுவின் தர்மத்தை மறப்பதா ?

"மற்றவர்களுக்காகத் தாமே கஷ்டமேற்று சிலுவையில் அறைந்து கொண்ட இயேசுவின் தர்மத்தைப் பின் பற்றுபவர்களெனக் கூறிக்கொள்ளும் நாம் அந்தத் தர்மத்தை மறந்து விடுவதா? துவேஷத்தில் ஊறாத மனோபாவத்துடன் கூடியவர்கள் மூலம் நியாயமான நிவர்த்தியைத் தேடுவது சுலபமல்லவா! தற்போதைய நெருக்கடியில் இந்த சமரஸத்துக்கு வழியில்லாமலா போய்விட்டது?"

இவ்விதம் கூறுவது யார்? எதற்காகக் கூறுகிறார்? இந்தியாவின் தலைமைப் பாதிரியான டாக்டர் பால்வெஸ்ட்காட் தான், தற்போது இந்தியாவில் நிலவியுள்ள நெருக்கடியைப்பற்றி மிகவும் மனம் வருந்தி மேற்குறித்தவாறு கூறினார். இந்தியாவின் பிரதம பாதிரியினுடைய இந்தத் தர்மோபதேசம் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்திற்கு நல்லறிவை ஏற்படுத்துமா? அவர்கள் இயேசுவின் தர்மத்தை நினைவுபடுத்திக் கொள்வார்களா? பிரிட்டிஷ் அதிகாரிகள் ஏதோ தாங்கள் இன்ன மதத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்காக, உலக மக்கள் துன்பத்தைத் துடைக்கத் தாமே கஷ்ட மேற்று சிலுவையில் அறைந்து கொண்டு இரத்தத்தைச் சிந்திய இயேசுவின் தர்மத்தைப் பின்பற்றுபவர்களெனக் கூறிக் கொள்கிறார்களே யொழிய, உண்மையில், அவர்கள் இயேசுவின் தர்மத்தைக் காலங் கடந்ததாகக் கருதி அலட்சியஞ் செய்து வருகிறார்கள். ஆகவே, அவர்கள் துரதிர்ஷ்ட வசமாக இந்தியாவில் நிலவிவரும் நெருக்கடியை நியாயமான முறையில் தீர்த்துக்கொள்ள முற்படாததில் ஆச்சரியமில்லை. இந்தியா பிரதம பாதிரி எடுத்துக் காட்டியுள்ளது போல், துவேஷத்தில் ஊறாத மனோபாவத்துடன் கூடியவர்கள் வாயிலாக நியாயமான நிவர்த்தியைத் தேடிக் கொள்வது சுலபமென்று அவர்கள் கருதவில்லை என்றே நாம் நினைக்கிறோம். எனவே தான், அவர்கள் காந்தியடிகள் விஷயத்திலும் காங்கிரஸ் மகா சபை விஷயத்திலும் நிதானந் தவறி அவசரமாக நடவடிக்கை

பெடுத்துக் கொண்டு, தற்போதைய நெருக்கடியைத் தீர்க்கக் கூடிய சமரஸத்துக்கு வழியில்லாமல் செய்து விட்டார்கள்.

ஸர். ஸ்டாபோர்டு கிரிப்ஸின் சமரஸ தூது துரதிர்ஷ்ட வசமாக வெற்றி பெறாது போய் விட்ட பின்னர், இந்தியாவின் அரசியல் நெருக்கடியைத் தீர்க்கவும், தற்போதைய மகாயுத்தத்தில் இந்தியாவுக்குரிய பங்கு என்ன? அந்தஸ்து என்ன? என்பதைத் தெரிவிக்கவும், பிரிட்டிஷ் சர்க்கார் முயலாது வெறுங் கண் துடைக்கும் வேலைசெய்து காலங்கடத்தி வருவதைக் கண்ட மகாத்மா காந்தி பொதுவாக பிரிட்டிஷ் மக்களுக்கும் சிறப்பாக பிரிட்டிஷ் சர்க்காருக்கும் தமது "ஹரிஜன்" பத்திரிகை வாயிலாகப் பலமுறை விண்ணப்பங்கள் விடுத்தார். கடைசியாக, அவர் "இப்போதுள்ள யுத்த நிலைமையில் பிரபஞ்சத்துக்கும் பிரிட்டனுக்கும் நன்மை யேற்பட வேண்டு மென்றால், பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து சீர் குலையாமல் வெளியேற வேண்டும்" என்று யோசனை கூறி வற்புறுத்தி வரலானார், இது ஸர். கிரிப்ஸ் முதலியவர்களுக்குப் பெரிதும் ஆத்திரத்தை யுண்டு பண்ணியது. "நாங்கள் இந்தியாவை விட்டு வெளியேறுவதா? அதிலும் யுத்த நெருக்கடி மிகுந்த இச் சமயத்திலா? இந்தியாவில் எங்களுக்கு இருந்துவரும் பொறுப்பில் நாங்கள் அவ்விதஞ் செய்ய முடியாது. நாங்கள் போய் விட்டால் இந்தியா அதோகதியாகி விடும். எதிரிகளைத் தாக்குவதற்கு இந்தியாவைத் தளமாக உபயோகிக்கவிருக்கும் சமயத்தில் அதைவிட்டு வெளியேறுவது நேச நாடுகளுக்கும் பாதகத்தை விளைப்பதாகும்" என்றெல்லாம் ஸர். கிரிப்ஸ் அங்கலாய்க்கலானார். கர்னல் அமெரியும் லண்டன் "டைம்ஸ்" முதலிய பத்திரிகைகளும் ஸர். கிரிப்ஸுடன் தாளம் போடலாயினர்.

இவ்விதம் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் பனோபாவம் தமது யோசனையை ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லாததைக் கண்ட காந்தியடிகள் இந்திய சுதந்திரம் பற்றி இறுதியாகப் போராட்டம் தொடங்கத் தீர்மானித்தார். தமது புதிய இயக்கத்துக்கு காங்கிரஸ் மகா சபையின் அங்கீகாரத்தைப் பெற விரும்பினார். இதன் பயனாகவே, சமீபத்தில் வார்தாவிலும் பம்பாயிலும் முறையே காங்கிரஸ் காரியக்கமிட்டிக் கூட்டமும் அ. இ. கா. கமிட்டிக் கூட்டமும் நடைபெறலாயின. அவற்றில் மகாத்மாவின் புதிய இயக்கத்துக்குப் பரிபூரண ஆதரவு அளிக்கப்பட்டது. கடந்த மாதத்தில் வார்தாவில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டியில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்துக்குப் பிறகு ஏற்பட்டுள்ள விளைவுகளை யெல்லாம் ஆலோசனை செய்து அதற்கேற்ப சென்ற வாரம் பம்பாயில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி தேசியக் கோரிக்கையை மீண்டும் விளக்கி புதிய தீர்மான மொன்றை நிறைவேற்றி யிருக்கிறது. பிரிட்டிஷார் இந்தி

யாவுக்கு உடனடியாக, பரிபூரண சுதந்திரத்தை அளிக்க இசைந்தால் யுத்தத்தில் ஐக்கிய தேசங்களுக்குச் சகல வகைகளிலும் உதவிபுரியக் காங்கிரஸ் தயாராயிருப்பதாகவும் பிரிட்டிஷ் அரசாங்கம் மேற்குறித்த காங்கிரஸ் கோரிக்கைக்கு இணங்காவிட்டால், பொதுஜன சாத்விக எதிர்ப்பு இயக்கத்தை நடத்தும்படி மகாத்மாவை வேண்டிக் கொள்வதாகவும் மேற்குறித்த தீர்மானத்தில் முக்கியமாக வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

இத் தீர்மானத்துக்குப் பின் மகாத்மா காந்தி பேசியபோது, "இன்றே இப்போதே இந்தியாவுக்குச் சுதந்திரம் வேண்டும்; இப்பொழுதே சுயேச்சை இந்தியாவுக்கும் நேச நாடுகளுக்குமிடையே கூட்டுறவு ஏற்பட வேண்டும். முதலில் குறிப்பிட்ட சுதந்திரத்தை எனக்கு அளியுங்கள்; இரண்டாவது குறிப்பிட்ட கூட்டுறவை நான் உங்களுக்கு வழங்குவேன்" என்று பிரிட்டிஷ் சர்க்காருக்கு யோசனை விடுத்தார். மேலும் அவர், "பிரிட்டிஷார் விஷயத்தில் என்னுடைய ஹிருதயத்தில் துவேஷமே கிடையாது. உண்மை என்னவெனில் எப்போதையும் விட இப்போது நான் அதிகமாக அவர்களுடைய நண்பனாக இருக்கிறேன். அவர்கள் கஷ்டத்திலிருப்பதே அதற்குக் காரணம். அவர்களுடைய நண்பனானதால் அவர்களது தவறுகளை எடுத்துக் காட்டுவதே என் கடமை. அவர்கள் ஒரு பெரிய பள்ளத்தில் விழுந்து விடும் நிலையிலிருக்கிறார்கள். அந்நிலைமையில் நான் இல்லை. ஆகவே, என்னுடைய கைகளை அவர்கள் வெட்டித் தள்ளுவதாக இருந்தாலும் சரி, பள்ளத்தில் விழவொட்டாமல் அவர்களைக் காப்பதே என் கடமை......அவர்கள் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பதால், அவர்களுக்கு மேலும் சங்கடம் உண்டு பண்ண வேண்டுமென்ற எண்ணமே எனக்கில்லை. எப்பொழுதுமே இருந்ததில்லை" என்றும், "நான் எனது சொந்த மக்களை எவ்வளவு தூரம் நேசிக்கிறேனோ அவ்வளவு தூரம் பிரிட்டிஷாரையும் நேசிக்கிறேன். மனித சமூகத்தைச் சேர்ந்த அனைவரையும் நான் சமமாக நேசிக்கிறேன். இவ்வுலகில் எனக்கு விரோதி யென்பவர் யாருமில்லை. அது எனது அடிப்படையான கொள்கை. மனித சமூகம் முழுதும் சமாதானமாக வாழ வேண்டுமென்பதே எனது கோரிக்கை" என்றும் விளக்கமாகக் கூறி யிருக்கிறார்.

காந்தியடிகள் "நியூஸ் கிரானிகல்" எழுதிய ஒரு தலையங்கத்துக்குப் பதிலளிக்கையில், "இந்தியாவின் மனப்பூர்வமான ஒத்துழைப்பைப் பெற்றாலன்றி, பிரிட்டனை அதன் தற்போதைய நெருக்கடியிலிருந்து காக்க முடியாதென நாங்கள் நம்புகிறோம். இன்று தங்களுக்குப் பூரண சுதந்திரமுண்டு என்று ஜனங்கள் உணர்ந்தாலன்றி; அத்தகைய ஒத்துழைப்பு

சாத்தியமில்லை. அந்நிய ஆதிக்கத்தின் கீழ் நெடுநாள் தன் புற்றபின் திரும்பப்பெற்ற சுதந்திரத்தை அவர்கள் பாதுகாக்க வேண்டுமானால், அவர்கள் உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்............'' என்று இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை அங்கீகரிப்பதனால், பிரிட்டனுக்கு ஏற்படும் நன்மையை நன்கு எடுத்துக்காட்டி யிருக்கிறார்.

மகாத்மாகாந்தி எடுத்துக் காட்டும் இவ்வுண்மையைப் பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் உணரவில்லை யாயினும், திருப்பத்தூர் கிறிஸ்து குல ஆசிரமத்தைச் சேர்ந்த டாக்டர். இ. பாரஸ்டர் பேபன் உணர்ந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. "இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஆதிக்கம் உடனே வெளியேற வேண்டு மென்ற காங்கிரஸ் கோரிக்கை நமக்கு வெறுப்பதைத் தரலாம். இம்மாதிரி கோரிக்கையை வெளியிட இது சமயமல்ல என்றும் நாம் ஆட்சேபிக்கலாம். ஆனால் தெளிவான மனதுடன் நாம் அதை ஆராய்ந்தால் அக் கோரிக்கை நியாயமா யிருப்பது மட்டுமன்றி, எந்த லட்சியத்துக்காக நேச நாடுகள் போராடுகின்றனவோ அதற்கு ஆதரவாகவும் இருப்பது தெரியவரும்............பொது நன்மையில் ஊக்கமுள்ள பெரும்பான்மையான இந்தியர்கள் வெளிநாட்டு ஆட்சி போகவேண்டு மென்று சொன்னால், நேசப் பான்மையுடன் வெளியேற சுதந்திரத்தை விரும்பும் மக்களாகிய நாம் தயாராயிருக்க வேண்டும்............யுத்தம் முடிந்து ஆறு மாதங்களுக்குப் பிறகு நிலைமை எப்படி யிருக்குமென்று தகுதியுள்ள எம்மனிதனும் நிச்சயமாகக் கூறமுடியாது. அத்துடன் பிரிட்டனுக்கு ஏகாதிபத்திய நோக்கமில்லை யென்று உலகுக்கு நிரூபிக்க இதுதான் வழி. மேலும் இத்தகைய நடவடிக்கை இந்தியா முழுவதையும் நேச நாட்டுக் கட்சியில் திடீரெனச் சேர்த்துவிடும். இதனால் பிரிட்டனின் நேச நாடாக ஒரு நவ இந்தியா உதயமாகும்" என்று கூறியிருப்பதைப் பிரிட்டிஷ் சர்க்கார் கூர்ந்து கவனித்தால் நலமாயிருக்கும்.

இவ்விதம், பிரிட்டனின் நன்மைக்காகவே, அதிகாரத்தை விட்டு வெளியேறும்படி கூறிய மகாத்மா காந்தியையும், மற்றும் காங்கிரஸ் தலைவர்களையும் இந்திய சர்க்கார் அவசரப்பட்டுச் சிறை செய்திருக்கின்றனர். இது எவ்வளவு மடத்தனமானது என்று கூறவும் வேண்டுமோ! காந்தியடிகள் சிறை புகுந்ததைக் கண்டு இந்தியா மட்டுமல்ல; உலக முழுவதுமே வருத்தத்தி லாழ்ந்திருக்கிறது. இந்தியாவின் பல பாகங்களிலும் கொந்தளிப்பும் அமளியும் ஏற்பட்டிருக்கின்றன. அதிகாரிகள்

---

(இதன் தொடர்ச்சி 59-ம் பக்கம் பார்க்க.)

# வினை வலி

(எம். முத்துகிருஷ்ணன்.)

இது சரியான கார் காலம் கூட இல்லை. இருந்தும்-என்ன செழிப்பு! என்ன வனப்பு!............களிமயில்கள் நர்த்தனம் புரிகின்றன; பனி நிரம்பிய முகில் கூட்டங்கள் பரவிக் கிடக்கின்றன; உலர்ந்த மென்சினைகள் திண்மையுடன் தளிர் விடுகின்றன.

அடடா! தெரிந்தது, தெரிந்தது. நிறை தெய்வீகம் கவிந்த நிடதாதிபதி—நளமகாராஜன் கானினூடே சென்று கொண்டிருக்கிறான். ஆமாம்! அது தான் அவ்வளவு செழிப்பும் வனப்பும்!

அதோ! அதோ!.........பிறப்பிலும், இயற்கையிலும் கொடும் பகையுடைய அந்த மானும், புலியும் எவ்வளவு நேசமாய் உறவாடுகின்றன! தகதக வென கொதிக்கும் பரல் கற்கள் தேன் துளிக்கும் மலர்களாக குழைந்து குழைந்து மென்மை யடைந்து விட்டன. ஒரு வேளை, ஐயனின் பாதசரங்களைக் குளிரவைக்க வேண்டு மென எண்ணின போலும்!

இலை வடிவமைந்த வேற்படைத் தலைவன்! மகுடமிழந்த 'மகுடபதி' அவனின் எதிர்புறமுள்ள மலர் மணம் வீசும் தடாகத்தின் மருங்கே, பளபளக்கும் அன்னப் பறவை யுருவில் 'கலிபுருஷன்' நடமாடிக் கொண்டிருக்கிறான்.

வெண் முத்துகளால் தொடுக்கப்பெற்று பொன்னொளி வீசும் அந்தப் 'புள்' சட்டெனப் படுகிறது அரசமா தேவியின் விழிகளில். குற்றம் நீக்கி உயிர் கொடுக்கும் சைத்ரீகன் கூட அரசியின்—தமயந்தியின்—சுய எழிலைத் தீட்ட திணறி விடுவான். அபார அழகி. நீலோற்பலத்தை ஒக்கும் அவளின் கயல் விழிகள் வைத்த இடத்தை மாற்றத் தயங்கின. அப் பார்வையின் தீக்ஷ்ண்யத்திலே, ஏதோ ஒரு 'விருப்பு' படிந்து, மின்னிட்டது.

"வாவியின் மருங்குசன் மணிகள் கோத்தெனத்
தூவியம் பொற்சிறை மென்புட் டோன்றலும்
ஓவிய ரெழுதரு முருவப் பைங்கொடி
காவியங் கண்ணிணை களிப்ப நோக்கினாள்"

முல்லைச் சிரிப்பு இதழ் பரப்பில் தங்கித்தங்கி ஓட, நேசத்தின் பாச நோக்கைக் காதலனின் மேல் தெளித்து அவன் உள்ளக் குமிழை ஊடுருவிப் பார்த்தாள் அவள். சுழலும் அந்த மீன் விழிகளில் அப்படியே சொக்கிப் போய் விட்டான் நளன். "பிற பெண்டிற்கு மார்பைக் கொடாத பரிசுத்தமான என் அண்ணலே!" என்றபடி ஆரம்பித்தாள் தமயந்தி,

..............................."தூமணிப்
பொற்றடந் தோளினாய் பொன்னம் புள்ளினைப்
பற்றிநீ தருகெனப் பணிந்து கூறினாள்."

'காதலியின் விருப்பைப் பூர்த்தி செய்ய வேண்டும்,' இந்த வேதவாக்கியந்தான் கண்முன் நின்று, அவன் இதயத்தையும் ஊக்கியது. பெண் பேச்

யைக் கேட்டு, மான் பின்னே ஓடி அவதியுற்ற அந்த ராமனின் உதாரணங் கூட அப்போது மறைந்து விட்டது.

அன்னத்தைப் பிடிக்க வலை கிலை ஒன்று மில்லையே!—ஏதாகிலுமோர் முண்டைக் கொண்டாவது சமாளித்துப் பிடிக்கலாம்! அமானுஷ்யமான அவ் வனத்தில் முண்டும், துண்டும் இவருக்கு விற்க, எந்த ஆவண வீதியும் தயாரா யிருக்கிறதா என்ன? இவன் அணிந்திருப்பதோ ஓர் ஆடை; அவள் உடுத்தி இருப்பதோ ஓர் சேலை; அன்னத்தை எவ் வகையிலும் பிடித்து விட வேண்டும்; வழி?

பார்த்தான் நளன். ஒன்றுமே தோன்றவில்லை. காந்தி வீசும் அந் தச் செவ்வதனம் வருந்தி கருகியது. ஆனால், சட்டென ஒளி வீசுகிறதே! உவகையின் மலர்ச்சியை அவ் வலிய புஜங்கள் எவ்வளவு லாவகமாய் காட்டு கின்றன! இதோ, தமயந்தி பேசுகிறாள்! அதிலே, ஏதேனுமோர் 'யுக்தி' இருக்கு மென்று நம்புகிறான் அவன்.

"ஓர் துகி லிருவரு முடுத்து மற்றையோர்
காரகிற் றீம்புகை கமழு நீவிகொண்
டேர்குடி யிருந்தென விலைகொள் பூணினாய்
வார்சிறைப் புள்ளினை வளைத்து மென்றனள்"

விலை மதிக்க வொண்ணா ஆபரணங்களணிந்து, அழகுக்கே இருப்பிடமாய்த் திகழும் நளன் நம்பியது சரியே! வாசனை வீசும் அந்தச் சேலையை இரு வரும் பகிர்ந்து கொண்டு, நீள் சிறை அன்னத்தைப் பற்றுதற்கு ஆயத்த மாய் விட்டனர்.

கருத்து விசாலமான கண்களை யுடைய தமயந்தி விரும்பும்படி, தன் கைத் துணி கொண்டு அன்னத்தைப் போர்த்தினான். அவ்வளவு தான். "தன் போன்ற தேவர்களை ஒதுக்கி விட்டு, ஒரு நரனை இச் சித்தாளே! பார்க்கிறேன் ஒரு கை!" என்ற இந்த வஞ்சக எண்ணங்கொண்டு போந்த கலி, அன்ன உருவில், அகப்பட்ட துகிலைடம் பறித்துக்கொண்டு—விண் ணிலே பறந்து மறைந்தான்.

"கருந்தடங் கண்ணிதன் னுள்ளங் காமுறத்
திருந்துவேற் றடக்கையான் றுகிலிற் சேர்த்தலும்
பொருந்திய துகிலொடும் வஞ்சம் பூண்டெதி
ரிருந்தபுள் ளந்தரத் தெழுந்து போயதே"

பசும்தோல் போர்த்த அப் பொன்னிற அன்னத்தின் சூதை அறிந்ததும் தம யந்தியின் பிரகாசமான கண்கள் கலங்கி நீரைச் சொரிந்தன. நளனின் மனமும் விம்மி பொருமியது. ஆனால், இம் மாதிரி ஏமாற்றங்களினால் மட்டும் அவர்களின் தெய்வீகக் காதல் கயிற்றின் முறுக்குகள் சிறிதேனும் தளர்ச்சி யுறவில்லை.

காதல் பந்தத்தில் கட்டுண்ட காரிகை கவலும்போது, காத்துத் தேற் றுவது—காதலனின் கடனன்றோ? நளனும், மெதுவாய் கூந்தலை கோதிய படி தன் காதலியின் மெலிவை அகற்றினான். அதற்காக அவன் உச்சரித்த ஆறுதல் மொழி ஒன்றே ஒன்று தான்.

"வினைவலி—இது" ஆமாம்! வேறென்ன முடியும் அவனால்!

# கண்வழி நுழைந்த கள்வனும் கருத்தழிந்த காரிகையும்

——:(0):——

(K. V. சிவசுப்பிரமண்யன், B. A.)

மணிமாட மதில் சூழ்ந்த மிதிலைமா நகரின் அணி வீதிகளில் அருக்கன் தனது கிரணங்களை யள்ளி வீசி வான வீதியில் தோன்றினான். அஞ்ஞான்று தசரதன் தவப்புதல்வனும் இராமனும் அவனிளவலாகிய இலக்குவனும் விசுவாமித்திர முனிவருடன் அந்நகர வீதிகளின் அழகினைப் பருகியளவளாவி நடந்து சென்றனர். நகருட் புகுந்த காளையர் கண்ணுற்ற காட்சிகள் பல. நுண்ணிடை மகளிர் நூபுரமார்ப்ப, துவண்டாடும் நாடக அரங்கினையும், உளக்களிப்பால் ஊஞ்சலிலாடும் உயரெழில் மங்கையரையும், கந்துகமெறிந்து கையிற் பிடித்தாடும் காரிகையரையும், சூதாட்டத்தில் களிக்கும் மகளிரையும் மாதர் குடைந்து நீராடும் மலர்த் தடாகங்கள் பலவற்றையும், கட்டிளங் காளையர் களிதுளும்பப் பயிலும் மற்போர்ச்சாலைகளையும், விற்போர்ச்சாலைகளையும், மாளிகைகளின் முன்றிலில் விளையாடும் அன்றில்களையும் கிள்ளைகளையும் கண்டு மகிழ்ந்தவராய் ஜனகன்வதியும் அரச வீதியினை அண்மினர். அதுபோழ்து, ஜனகனது தவப்புதல்வியாம் சீதாபிராட்டி கல்லும் புல்லும் கண்டுருகும் கவினுடையளாய், கண்டார் கருத்தினைக் கொள்ளைகொள்ளும் பேரெழிலினளாய் கன்னிமாடத்தின் கண் தன் தோழிகளுடன், இயற்கை யன்னையின் எழிலுறு காட்சிகளைப் பருகிய வண்ணம் நின்றிருந்தாள். அவளது அழகினைக் காண இந் நாட்டவர் இமையா நாட்டம் பெற்றிலமே யென ஏங்கியும் உம்பர் நாட்டவர் இரு கண்ணாற் காண அமையாதென்று அருந்தவம் செய்தும் கிடந்தனர் என்ப. அது சமயம் ஆங்கு நிகழ்ந்ததோர் நிகழ்ச்சியினை ஈண்டு கூறுவோம்.

மாளிகையின் சாளர வாயிலில் நிற்கின்றனள் சீதை. வீதிவழியே சென்ற இராமனும் முனிவனும் அரண்மனையின் அருகில் வருகின்றனர். முற்பிறப்பின் ஊழ்வினை கூட்டுவிக்க, அவ்வுயர்ந்த மாளிகையை எதிட்டு நோக்குகிறான் இராமன்; கணப்பொழுதில் கன்னிச்சீதை கண்களில் படுகிறான்; அவ்வளவு தான். அவனது கண்கள் சீதையின் கண்களைச் சென்று கவ்வின; அதே நொடியில் அவளது மலர்க் கண்களும் மாதவனது கண்களை ஓடிப் பற்றுகின்றன. உடனே இருவரது உளத்திலும் என்று மறியாததோர் புத்துணர்ச்சி தோன்றுகின்றது. இங்ஙனம் இவ்விருவரது கண்களும் புறத்துறு வின்பம் துய்த்த அக்கணமே இருவரது அறிவும் ஒன்றும்படி அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள். கண்ணொடு கண் நோக்கொக்கின் வாய்ச் சொற்கள் எப்பயனுமிலவன்றோ? அங்ஙனமே இருவர் நோக்கு மொன்றுபட அவர்களது காதல் மலர் அப்பொழுது அரும்புகின்றது. ஊழ்வினைப் பயனே அவர்கள் ஒருவரை யொருவர் நோக்கும்படி செய்ததெனினும், மணம் புணரா மாதவத் தாட்டியாகிய மிதிலை மன்னன் தவப்புதல்வி வீதிவாய்ச் செல்லும் முன்பின் னறியாததோராடவனைக் கண்டு கருத்தழிந்தாள் என்று கூறியது கற்புடை நங்கைக்

கோர் களங்கமன்றோ வென சிலருக்கு ஐயமேற்படலாம். அது பற்றியே கம்பர் அந் நிகழ்ச்சியை மிகத் திறம்படக் கூறுகிறார்.

இராமனும் சீதையும் கடி மணம் புணராக் கட்டிளங் குரிசிலாகவும் கன்னிகையாகவும் விளங்குகின்றனர். தம்முள் தாமே ஒத்த குலமும், குணமும், திருவும், காதலும் வினைய பண்பும் உடையாரைத் தேர்ந்து மணந்து காதல் வாழ்க்கையில் ஈடுபடற்குரிய கனிந்த பருவத்தினர். ஆகவே பண்டையூழ், நோக்கெனும் கருவி கொண்டு அவ் விருவரையும் கூட்டி வைக்கின்றது. ஆடவரினும் பெண்டிர் காமம் மிகுதியும் உடையாரெனினும் "நாணம்" எனும் நற்பண்பு முன்னின்று தடுத்தலால் பெண்டிர் ஆடவரை முன்பு நோக்கார். அது மரபு. அது பற்றி சொல்லின் செல்வராகிய கம்பர்,

"கண்ணொடு கண்ணிணை கவ்வியொன்றை யொன்று
உண்ணவு நிலைபெறா துணர்வுமொன்றிட
அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினாள்"

என்று கூறி இராமனே முன்பு நோக்கியதாகக் கூறி இந் நிகழ்ச்சியினைச் சிறப்பித்தார். ஊழ்வினை கூட்டி வைத்ததால் அவளும் நோக்க நேர்ந்தது. இங்ஙனம் ஒன்றை யொன்று நோக்கிக் கொண்டிருந்த கண்கள் சில கணங்களில் தத்தம் நிலை மாறி இராமனது கண்கள் சீதையின் மார்பகத்திலும் சீதையின் கண்கள் இராமனது புயங்களிலும் சென்று புதைந்தன. நோக்கெனும் பாசத்தால் ஒருவரை யொருவர் பிணிக்கப்பட்டவராய் இருவர் இதயமும் ஒன்றாகி இரண்டுடலும் ஒருயிரும் என்றாகின்றனர். இந் நிகழ்ச்சிகள் யாவும் நிகழ்ந்தது சில விநாடிகளில்.

இராமன் உடன்வந்த ஒருவரோடும் மறைந்து விடுகிறான். சீதையின் உடலிங்கிருப்பினும் அவளது உணர்வினைப் பிணித்துச் சென்று விட்டான் இராமன். அதைத் திரும்பவும் தன் வசம் கொணர சீதையின் நாற்குணமென்னும் அங்குசமும் பயனிலவாயிற்று. காதல் நோய் வாட்டக் கருத்தழிந்தனள் காரிகை. மாரவேளும் மலர்ச்சரம் தொடுத்துக் கைவிளைத்தனன். கண்வழிப் புகுந்த காதல்நோய் பாலிலிட்ட பிரையென அவளது உடல் முழுதும் பரவியது; தீயிடை நெய் பெய்தாற்போன்று காதல் நோய் கனன்றது; அந்நோய்க்கு ஆற்றாளாகி சந்திரனையும், தென்றலையும், அன்றிலையும், தாதியர் செய்யும் ஏவல்களையும், ஆடை யணியலங்காரத்தினையும் மலர்மாலைகளையும் வெறுக்கின்றனள் சீதை. இராமனது இந்திரநீல மொத்த இருண்ட கூந்தலும் சந்திரபிம்பம் போன்ற வதனமும், தாழ்ந்த கைகளும் மணிவரைத்தோள்களும் சீதையின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அவையெல்லாவற்றினும் அவனது சுந்தரப் புன்முறுவல் உயிரையும் கவர்ந்து கொள்ளும் சக்தி யுடையதாய் உளதே என் மனம் மாழ்கினள். அன்றொரு நாள் அணிநகர் வீதியிற் சென்றென் உள்ளங்கவர்ந்த கள்வனை மீண்டொரு நாள் என்று காண்பேனோ என்று ஏங்குகிறாள். விசுவாமித்திரர் இராமனை உடனழைத்து வந்து சனகனது அரசவையில் அனைவரும் ஆச்சரிய முற எடுத்து நாணேற்றி ஒடித்தான் என்ற செய்தியைத் தன் தோழிவாய்க் கேட்கும் நாள்வரை அவ்வேக்கம் அவளைவிட்டு நீங்கின பாடில்லை. அங்ங

ளம் நீலமாலை என்னும் அவளது தோழிவந்து இராமன் வில்லை நாணேற்றி ஒடித்தான் என்று கூறிய ஞான்றும் "இன்று வில்லை முறித்த இளங்குரிசில் அன்று நகர் வீதியில் கண்ணுற்று கருத்திற் பதிந்த காளையாய் இல்லாது பிறனொருவனாயின் அவன் அனங்கனிலும் அதிக அழகுடையோனாயினும், உயிர் நீப்பேன்" எனக் கூறுகின்றாள்.

"இல்லையே நசைப்பென்பர் உண்டுண்டெனவும்
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்றலே யவன்
அல்லனேல் இறப்பேனென் றகத்து ளுன்னினாள்."

என கம்பர் பெருமான் சீதையினது கற்பின் திறத்தை விளக்கினார்.

சீதையினது மனவுறுதி அவளை கற்பினுக் கணிகலனாக்குகின்றது. ஆகையால் வாயு மைந்தன் அசோகவனத்தில் கண்ட சீதையின் நிலையை இராமனிடம் எடுத்துக் கூறுங்கால் "கண்டனன் கற்பினுக்கணியைக் கண்களால்" எனக் கூறியது சாலவும் ஏற்புடைத்தன்றோ? யாவராலும் முறிக்க இயலாத வில்லை முறித்த ஆடவன் மிகச் சிறந்தவனாகத்தானே இருக்க வேண்டும்; அவனை மணந்து கொண்டாலென்ன? மேலும் அன்று கண்ட அவ்விளங் குரிசில் மீண்டும் வருவானோ என்ற ஐயப்பாடொருபுறம். தன்னை யறியாது தன்னுள்ளங் கவர்ந்த கள்வனே தனக்கென விதிக்கப்பட்ட காதலனாவான், அவன் எப்படியும் மீண்டும் வந்து தன்னைக் காண்பான். அவன் புகுந்து கிடக்கும் தன் இதயத்தில் பிறிதோர் ஆடவன் இருக்க இடமேது? என்ற உயரிய காதலொழுக்கத்தை மேற்கொண்டவளாய் சீதை தன் மன உறுதியை எள்ளளவும் மாற்றினாளல்லள். அவளது விழைவின்படியே அவளை யும் இராமனையும் கூட்டி வைத்தது ஊழ்வினை.

இத்தகைய கற்பொழுக்கம் சிறந்து விளங்கிய நமது நாட்டில், இஞ் ஞான்று மேனாட்டு நாகரீகக் காதலொழுக்கம் புகுந்து மக்களின் வாழ்க்கை யைச் சீர்குலையச் செய்கிறது.

---

## இயேசுவின் தர்மத்தை மறப்பதா?

(54-ம் பக்கத் தொடர்ச்சி.)

அடக்கு முறையைக் கடுமையாகக் கையாண்டு வருவதன் பயனாக, நிலைமை மிக மோசமாய்க் கொண்டு வருகிறது. இந் நெருக்கடி யான சமயத்தில்—அதுவும் சத்தியத்தையும் அஹிம்சையையும் அடிப்படையாகக் கொண்டுள்ள இந்தியா விஷயத்தில் இயேசு வின் தர்மத்தை மறப்பதா? என்று பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத் தைக் கேட்டுக் கொள்வதைத் தவிர, நாம் வேறென்ன செய்ய முடியும்? இந்தியாவை இவ் விபரீதத்தினின்றும் இறைவன் தான் காப்பாற்ற வேண்டும்.

# புத்தாண்டு வாழ்த்து



## 7

புதுமையிற் பழமை புகுத்தி,மே லான
புண்ணியம் மிகவெடுத் துரைக்கும்
முதுமொழித் திரளே! என்.முனி சாமீ
முற்பட வளர்த்தபூங் கொடியே!!
பொதுநிலை நின்றே நடுவணைத் துரைக்கும்
பொறுமை "ஆனந்தபோ தினியே!"
எதுநினை லாகா தியம்புவாய்? வாழி!
எம்மனோர்க் கருள்கனி ஈந்தே!!

வித்துவான்—எம். சாம்பசிவம்.

## 8

மன்புகழ்கூ ரின்றமிழ்சேர் மகிபன்முனி
சாமிமுனில் வழங்கு சீரால்
தென்றமிழின் தீஞ்சுவைத்தேன் தென்றல் மணந்
தெளித்துவளர்ந் திலங்குந் தேவீ!
அன்புகனிந் திலகுறுமெம ஆனந்த
போதினியாம் அரசீ! நின்றன்
இன்புமிகும் புத்தாண்டின் எழில்வளர்ச்சி
நீடூழி இனிது வாழி.

By-N. குஞ்சிதபாதன், அண்ணாமலை நகர்.

## 9

தேனோ? பாகோ? திரள்கற் கண்டோ?
வானோ ரேத்தும் வண்புக ழமுதோ?
முக்கனி பாலோ சர்க்கரை தானோ?
என்னோ? வென்னு மின்சுவை தெளிக்கும்
அன்னாய்! அன்னாய்! ஆனந்தபோதினி!
வருக! வருக!! வளமுடன் வருக!!
காரெதிர் மயிலென கதிரெதிர் மலரென
நின்வர வெதிர்ந்தே நின்றேம் இன்றே
அகங்களி சிறக்கும் அமுதே வருக!
தீஞ்சுவை தெருட்டும் தேனே வருக!!
வாழி வாழி நின் வருகை
மனமகிழ்ந் தெம்போல் பவருளங் கொளவே!

—குமாரி. A. K. வசந்தகோகிலம், திருவண்ணாமலை.

## 10

தேமினிய குயிலே கேட்டியே யெங்கள் செல்வி
ஏதமிலாநற் சுடரி னேருடை யபெயர் வினவின்
ஆதரம் மிக்க ஆனந்த போதினி என்றகிலம் போற்றும்
சூதவஞ் சூழ்சரி குழலாள் பல்லூ ழிவாழக் கூவாய். (1)

போர்முரசின் பேரிடி யாலகி லமெலாம் பயந்து நின்று
ஏர்பெரு மின்பமெலா மிடியுற்ற நாகமென இரிந்து மாய்ந்து
சீற்று தரணி யெலாஞ்சிதையு ளாழ்ந்த போதும்,
பேரின்ப நல்கு மானந்தபோ தினி, வாழக் கூவாய். (2)

தென்னல் வீசுந் தண்சோலை பயிலும் நீலப் பைங்குயிலே
மன்பதை யுலகின் மையிரு ளகற்றும் விண்மணி மான
மன்னுயிர் தன்னின் மனவிருள் மாய்க்கும் மேதகு மங்கை
முன்னவ னருளால் வாழ்க பலவூ ழியென்றுநீ கூவாய். (3)

அழுதொழு கப்பாண் மிழற்று மாண்குயிலே எங்கள் செல்வியை
இமையது காக்குங் கருவிழி யன்ன இயல்பாய் வவர்க்குங்
சுமையுறு செல்வன் நற்பெயர் கூறின் முனிசாமிக் கோவாம்
அமைவுறு அதிபன் அவனும் வாழக் குயிலேநீ கூவாய். (4)

தேனொடு பால்கலந் தன்னத் தீஞ்சொற் பகருங் குயிலே
மானொடு மழுவு டையான் மையிலா தண்ணருளால் மேதினியில்
கோனொடு வாழ்க பகலவன் வாழுங் காலும் என்று
தானொடிப் பாடிக் குக்குக் குவென்றுநீ கூவாய் குயிலே!!!

—வே. கணேசன், தென்மலபார்.

## 11

தெள்ளியவின் பத்தமிழே வடிவமாகத்
  தேடரிய மெய்யுணர்வே யுயிரதாக
வெள்ளியபே ருண்மைவதே யாடையாக
  வேதாந்தத் துட்பொருட்பூ மாலையாக
வள்ளுவர்போல் முதுக்குரவ ருள்ளமுள்ளி
  வரைந்தநூல்கட் குரைகட் காற்சிலம்பே யாகத்
தள்ளரிய வளையூடச் சாணியன்னத்
  தகைமைசால் பொருள்களொலிப் பாலாத் தோன்ற. 1

தொன்னூற்க ளெனுங்கதிர் செய்மணிகள் வைகும்
  தோமறுநற் புகழ்ச்சி யென்பொன் மகுடஞ்சூடி
ஒன்றுரு செஞ்சுட்டிப் புறத்தொதுங்கும்
  ஒப்பரிய வீரமென் செங்கோற்கை யேந்தி
என்னரும் பிறமொழிக ளென்றியம்பும்
  எழிலான சேடியர்க ளேத்தித்தாழப்
பொன்னனை சாந்தமெனு நிழலைச் செய்யும்
  பொருணிறைவு என்னுமோர் கவிகைமேய. 2.

தண்டமிழா சான்களெனு மரிகள் தாங்கு
        தனிப்பெருமை யென்பொற் பீடத்தமர்ந்து
கண்டவரா னந்தமுற விருபத்தேழுங்
        கடப்பவாண்டர சாட்சியஞ் செய்தெட்டில்
மண்டலமே யதிர நடைநடந்து மீண்டும்
        மகிழவரு கின்றநின் வருகை நன்றே
அண்டர்கண் மாதவத்தவ ரெல்லோரும் போற்றும்
        "ஆனந்தபோதினி" யென்னருமைத் தாயே. 3.

நற்றாயாகப் பெற்ற நாங்கட்பெற்ற
        நிறைசெல்வத் தனையெடுத்து நிகழ்த்தப்போமே
கற்றாயக்கல்வி பெற்றோங்கதியும் பெற்றோம்
        கைத்தொழிலும் வாணிபமுங் கருதப்பெற்றோம்
மற்றாய விஞ்ஞான கலையும் பெற்றோம்
        மதிவளமு நிதிவளமு மல்கப்பெற்றோம்
பற்றாயப் பழந்தமிழ ரொழுக்கம் பெற்றோம்
        பகுத்தறிவு மரசியல் ஞானமும் பெற்றோமே. 4.

நீயாகுந் தமிழ்மொழியை யிகழ்ந்து பேசி
        நிலையறக்கக் கூற்றுடன்று நின்றிட்டாலும்
வாயாறு குருதியுகக் குடுமிப்பற்றி
        வழக்கறவே பற்றகர்த்து விடுப்போமல்லால்
போயாதுங் குறையிரவோங் கெஞ்சோ மன்னப்
        பொருவரிய வீரமும் பொருந்தப் பெற்றோம்
தாயாக நிற்பெற்றாலதைப் போலாக்கக்
        தாலத்தின் மிசையுளதோ சாற்றுவாயே. 5.

ஐந்தருநீழற் சுமந்தவணை யமர்ந்து
        அரம்பையர் களமிழ்தூட்ட வுண்டுவக்கும்
இந்திரன் றனாசேனு முட்கிளர்ந்து
        இனியதென வெட்டுணையு மிச்சைகொள்ளோம்
சந்தத நினைக்குந்தோறு மெழும்பிப் பொங்கிச்
        சலசலவென் றிழிந்திடு தண்டமி ழின்பத்தை
சொந்தமதாகப் பெறுகவென் றளித்து
        சொற்சுகத்தோ டிருக்க வருட்செய்தியாயின். 6.

சீர்மருவுங் கற்பகமே வாழி வையஞ்
        சிறந்திடவே பன்முறைகட் செப்பலென்னும்
நீர்மருவுங் கார்முகிலே வாழிநல்ல
        நெறிபடரு மக்களுக்குக் கல்விகேள்வி
ஆர்மருவுந் தமிழ்ச்சுடரே வாழியுண்மை
        "ஆனந்தபோதினி" யென்றழகமைந்த
பேர்மருவு குருமணியே வாழியிந்தப்
        பேருலகில் வாழிய நீடுழிமாதோ. 7.

# இதுவா தமிழ்த் தொண்டு?

(S. பழநியப்பன்.)

நமது "ஆனந்தபோதினி" வைகாசி இதழில் "எது தமிழ்த் தொண்டு?" என்ற தலைப்பில் ஸ்ரீ. எஸ். நாராயணன் அறிஞர் ஸ்ரீ. டி. கே. சி போன்றோர் செய்துவரும் தமிழ்த் தொண்டைப்பற்றிப் பிரஸ்தாபித்து எழுதியிருந்தார். இக் கட்டுரைக்கு ஸ்ரீ. இரகுநாதன் ஆடி இதழில் ஒரு மறுப்பு வெளியிட்டிருப்பதை வாசகர்கள் அறிவர்.

'எது தமிழ்த் தொண்டு?' என்ற வினாவிற்கு 'இதுதான் தமிழ்த் தொண்டு' என்று செவிட்டில் அறைந்தாற்போல் விடை கூறிவிட்டதாக ஸ்ரீ. இரகுநாதன் எண்ணம்போலும்! அவ்விடையின் போக்கைக் கூர்ந்து கவனித்தவர்கள் ஸ்ரீ. நாராயணன் எழுப்பிய முக்கிய ஆட்சேபத்துக்குச் சரியான பதிலளிக்க முடியாது ஸ்ரீ. இரகுநாதன் மழுப்புவதை அறிவர். அவர் ஒரு இடத்தில் சிறிதும் பொருத்தமில்லாது நன்னூல் சூத்திரத்தைக் காட்டியுள்ளார்.

இரகுநாதன் பதங்களைப் பிரித்துப் போடுவதைப் பற்றியே மிக விரிவாக வற்புறுத்திக் கூறி உதாரணமுங் காட்டியுள்ளார். ஆனால் அந்த உதாரணத்தில்,

1. முன்+தான்+தாமரை என்ற வார்த்தைகள் முட்டா டாமரை என்று புணர்ந்துவிடுகிறது.

5. முன்+தைத்துவிட்டது என்ற வார்த்தைகள் முட் டைத்து விட்டது என்று மாறிவிடுகின்றன.

என்று காட்டி "மேற்கண்ட இரண்டிலும் ஏதாவது உயிர் இருக்கிறதா? அர்த்தம் புலப்படுகிறதா?" என்று சுலபமாகக் கேட்டுவிட்டார். இலக்கணம் உணர்ந்தவர்களுக்கு அவ் வார்த்தைகளில் ஏன் உயிர் இருக்காது? ஏன் அர்த்தம் புலப்படாது? ஏன் காதுக்கு இனிமையைத் தராது? என்று நான் கேட்கிறேன். இலக்கணம் உணராத படிப்பாளர்களுக்குத் தான் மேற்குறித்த வார்த்தைகளில் உயிர் இருக்காது, காதுக்கும் கர்ண கொடூரமாயிருக்கும். இதற்குக் காரணம் நுண்ணுணர் வின்மையும் அறிவு நிரம்பாமையுமேயாம்.

நண்பர் நாராயணன் வற்புறுத்திச் சொல்லியது என்னவென்றால் லகர ஒற்றும் ளகர ஒற்றும் மற்றொரு ஒற்றுடன் வராது என்பது தான்.

அக் கூற்றுக்கு நண்பர் இரகுநாதன்,

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே." (ந. சூ. 462)

என்னுஞ் சூத்திரத்தை எடுத்துக் காட்டுகிறார். இது மேல் போக்காகப் பார்த்தால் பொருத்த முடையதாகத் தோன்றுமே யொழிய, உற்றுப் பார்த்தால் ஒரு சிறிதும் பொருத்தமில்லை என்று நன்கு விளங்கும். இச்

சூத்திரம் எதற்காகக் கூறப்பட்டதோ வெனில் முதல் நூல் செய்த கால த்து வழங்கியவைகளை, வழி நூல் செய்பவர் தாம் நூல் செய்யுங்காலத்து வழங்குவன சேர்த்து வழங்காதன நீக்குதற் பொருட்டுச் செய்த சூத்திரமன்றி புறம்பான விதிகளுக்குக் கூறிய சூத்திரம் அன்று. இதை நன்னூல் சூத்திரம் 7-வது உரையைப் பார்த்தால் தெரியும்.

மேலும், விதியல்லாத விதிகளை யெல்லாம் தடையின்றி ஆண்டு விட்டு அச் சூத்திரத்தைக் கூறிப் பொருத்திக் காட்டுதல் பொருந்துமா? அப்படி யென்றால் ஒவ்வொருவரும் புறம்பான விதிகளைப் போட்டு விட்டு மேல் சூத்திரத்தைக் காட்டி விடலாம். இவ்விதமான காரணங்களைக் கொண்டா வது புறம்பான விதிகளுக்குச் சூத்திரம் இடங் கொடுக்காதென்பதை ஸ்ரீ இரகுநாதன் போன்றோர் நன்கு உய்த்துணர்வார்களாக.

இனி அம் மாதிரி எழுத்துகளைச் சேர்ப்பதும் தவிர்ப்பதும் நம் மன போக்கின்படி போட்டுக் கொண்டால் இலக்கணம் வேண்டுவதில்லை ஒரு வர் ஏதோ சில விஷயங்களில் பெயர் பெற்றிருந்தால் அவர் சார்பாகப் பேசுவதும் அவர் சொல்லுவதே வேதம் என்றும் சாதாரண மக்கள் கொள் வது நாம் அறிந்த தொன்று. அறிஞர்கள் அப்படி எல்லாம் கொள்வது கூடாது. ஏனென்றால் உயர்ந்தவரிடம் இருந்து பொய்ப் பொருளும், தாழ்ந் தவரிடமிருந்து மெய்ப்பொருளும் தோன்றுதல் கூடும். அதனால் எதில் உண்மை காணப்படுகின்றதோ அதையே நாம் கொள்ளுதல் வேண்டும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்பது குறள்.

ஆகவே நண்பர் நாராயணன் லகர ளகரம் ஈரொற்றாய் வாராதென்று கூறியதே மெய்ப்பொருள். மற்று அதற்குப் பொருந்தாக் கூற்றை கூறி மறந்து வித்தை காட்டுவது பொய்ப் பொருள்.

நன்னூல் ஆசிரியர்,

"யரழ வொற்றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றும்மாழத் தனிக்குறி லணையா"

என்னும் சூத்திரத்தில், லகர ளகரம் ஈரொற்றாய் வரும் என்று கூறிப் போகவில்லை என்பதை ஸ்ரீ இரகுநாதன் அறிந்து மயக்கத்தைப் போக்கிக் கொள்வாராக. ஆகவே, இலக்கண விதியில் இதுவரை ஆட்சியில் இல்லாத ஒரு விசித்திர முறையை ஸ்ரீ. டி. கே. சி. அல்ல; அவரை விடப் பெரியவர் புகுத்தினும் அது சரியல்ல; தமிழ்த் தொண்டுமாகாது என்று நான் கூற விரும்புகிறேன்.



# “வழுதி ஆய்ந்த உண்மை”

(நெல்லை-விநாயக்.)

‘நந்தி விளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்
பந்த ரிளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ் முத்தம் போற்றோன்றுஞ் செம்மற்றே தென்னன்
நகைமுத்த வெண்குடையான் நாடு,’

எனத் தண்டமிழ்ப் புலவரால் வருணிக்கப் பெற்றிருக்கும் பெருமைசேர் பாண்டி நாட்டிலே, பாண்டியர் குலத்தில் ‘இளம் பெரு வழுதி’ எனும் பெரியார் ஒருவர் தோன்றி யிருந்தார். இவர் இளமையிலேயே பேரறி வினராகத் திகழ்ந்தார். இஃது ‘இளம்பெரு’ எனும் அடை மொழியினால் நன்கு விளங்கும். இவர் யாது காரணத்தாலோ, கடலுள் வீழ்ந்து உயிர் துறந்தார். இதுவும் ‘கடலுண் மாய்ந்த,’ எனும் அடைமொழியினால் அறி யப் பெறும். ஆகவே, இவர், ‘கடலுண் மாய்ந்த இளம்பெரு வழுதி’ யென புற நானூற்றுப் பாடலில் குறிக்கப் பெற்றிருக்கிறார்.

அநீதி, அதர்மம், பொய், பொறாமை, சண்டை சச்சரவுகள், மற்றும் பஞ்சமா பாதகங்கள் முதலியவைகளே நிறைந்திருக்கும் இவ் வுலகம் இன்ற ளவும் நிலை பெற்றிருப்பதன் காரணம் என்னை? ஆழ்ந்து யோசிக்கின், பலர் பலவிதமான முடிவுகட்கு வரக்கூடும். ஆனால் அவை யாவும் சரியான காரணமாய் இருக்க முடியாது. உண்மையான காரணத்தை, இளம் பெரு வழுதி ஒருவரே ஆராய்ந்து கண்டு பிடித்தார். விலை மதிப்பற்ற தமது அரிய கருத்துக்களை, ரத்தினங்கள் பதிப்பித்தாற் போன்று, ஒரு அழகிய செய்யுளில் எடுத்துக்காட்டி யிருக்கிறார். அச் செய்யுள், சொல்லாலும் பொருளாலும் இனிமை வாய்ந்தது.

‘மிகவும் அரிய குணங்களையும், சொந்தன்மையும் பூண்ட விழுமி யோர்கள் இருப்பதனாற்றான், இவ் வுலகம் இன்றளவும் நிலை பெற்றிருக்கி றது’—என்பதே அவர் கண்டு பிடித்த ஒப்பற்ற உண்மை. அத்தகைய விழுமியோர்கள் பண்புகளை, ‘வழுதி,’ நமக்குப் படம் பிடித்துக் காண் பிப்பது போன்று மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார்.

அமரர்கட்குரிய அமிழ்தம் அவ் விழுமியோர்கட்கு, தெய்வ சகாயத்தி னாலாவது, தாம் செய்த தவத்தின் பயனாலாவது கிடைக்கப்பெற்ற போதி லும் அவ் வமிழ்தம் நாவிற்கினியது, அதனாற் கிடைக்கப் பெறும் பயனு மினிதென தாம் மாத்திரம் தனித்துப் புசிக்க மாட்டார்கள். இங்ஙனம், “காகம்போல் பகிர்ந்துண்ணும் பண்பை” நாம் அவர்களிடம் காண் கிறோம்.

அவர்கள் யாவரிடத்தும் அன்பு பூண்டு ஒழுகினர். எக் காரணத்தைக் கொண்டும் யாவர் மீதும் வெறுப்பற்ற தன்மையுடையவரா யிருந்து வந்த னர். சிறந்த, ஒரு தொழிலை மேற்கொள்ளுவதினால் ஏற்படுந் துன்பங்கட்கு, சாதாரண மக்கள் பெரிது மஞ்சுவார்கள். அஞ்சுவது மட்டுமல்ல, தாம் மேற்கொண்ட தொழிலையே அயர்வுற்றுக் கைவிட்டு விடுவார்கள். ஆனால்,

சான்றோர்கள் பிற மக்களைப் போலல்லாமல், தாங்கள் மேற்கொண்ட தொழிலை வெற்றியுடன் செய்து முடிக்குந் தன்மையை உடையவர்கள்.

இனி, இவர்கள், 'புகழை வருந்தியுங் கொள்ளவேண்டு மென்பதற்கிணங்க, தம் உயிரைக் கொடுத்தாயினும் புகழ் ஈட்டும் இயையினர். ஆனால் 'பழி' யென்றாலோ, இவ் வுலக முழுவதும் பெறுவதா யிருப்பினும் அப் 'பழி'யைக் கொள்ளமாட்டார்கள். 'வாணன் வைத்த விழுநிதி பெறினும் பழி நமக்கெழுக வென்னாய் விழுநிதி, ஈதலுள்ள மொடு இசை வேட்குவையே', எனும் சிறிய கருத்தை ஈண்டு நோக்கற் பாலது.

மனக் கவர்ச்சியற்ற சான்றோர்களாகிய இவர்கள், மேலே கூறப்பட்ட மாண்பு உடையவர்களாகி, தம் நலத்திற்காகப் பாடுபடாமல், எஞ்ஞான்றும் பிறர் நலத்திற்காகவே, தம்முடைய வலிய முயற்சியினால் பாடு படுகின்ற பெருந் தன்மை யுடையவர்கள். இவர்கள் உலகின்புறக் கண்டு தாம் உளமகிழ்வர்.

இவ்விதம் தம் வாழ்வினைப் பெரிதென மதியாமல், பிறருடைய வாழ்க்கையின் நலத்திற்காகவே பாடு படுகின்றவர்களும், மேற் கூறப்பட்ட ஒப்பற்ற சிறந்த பண்புகள் யாவுமொருங்கே நிறையப்பெற்ற சான்றோர்கள் இருப்பதனாலேயே இவ் வுலகம் இன்றளவும் நிலைத்திருக்கிறது என்பதே 'வழுதி ஆய்ந்த உண்மை.'

'ஹிட்லர், முஸோலினி, டோஜோ போன்ற அதர்மச் சொரூபிகள் நிறைந்த இக் கலியுகத்தில், மகாத்மா காந்தியடிகள் போன்ற சான்றோர்களிருப்பதினால்தான். உலகம் அழியாது நிலைத்திருக்கிறது,' என்று உரை செய்யவும் வேண்டுமோ ?

இனி, கவிஞர் செய்யுளில் தம் விலை மதிப்பற்ற விழுமிய கருத்துக்களை, அழகிய சொற்களால் மலர்களை மாலையிற் றொடுப்பது போன்று செய்யுளில் அமைந்திருப்பது கண்டு ஆனந்திக்கத்தக்கது.

நேரிசை யாசிரியப்பா.

"உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே." (புறம். 182.)

இச் செய்யுளை யொட்டி,

'பண்புடையார்ப் பட்டுண்டுலகம் அதின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.'

என்ற குறட் கருத்து மறியத்தக்கது.

# சக்கரவர்த்தி

[நாகூர் M. கனகசபை.]

சக்கரவர்த்தி குறும்புக்கார சிறுவர்கட் கெல்லாந் தலைவன். அவனிருந்த கிராமத்தில் அவனை வெல்ல இதுவரை யாருந் தோன்றியதில்லை. ஒரு நாள் அவன் மனம் புதுவகைக் குறும் பொன்றைச் செய்ய வெண்ணியது. ஆற்றங் கரையில் படகுக்குப் பாய்மரம் செய்வதற்காக ஒரு பெரிய மரமொன்று கிடத்தப்பட் டிருந்தது. கூட்டாளிகளுடன் கூடி அம் மரத்தை அவ் விடத்தை விட்டுப் புரட்டி விட வெண்ணினன் சக்கரவர்த்தி. இதைக் கண்டு மரத்திற்குடையவன் மிக்க சீற்றமும், இறும்பூது மடைவானன்றோ? இதனைக் கண்டு தோழர்களுடன் கை கொட்டிச் சிரிக்க விழைந்தான் நம் சக்கரவர்த்தி. தீர்மானம் ஒரு முகமாக நிறைவேறியது.

இவ் வேடிக்கை நிகழப் போகுந் தருணத்தில் மாணிக்கம்—சக்கரவர்த்தியின் இளவல்—ஒன்றுங் கூறாது அம் மரத்தில் ஏறி அமர்ந்து கொண்டான். இதைக் கண்ணுற்றவர்கள் என்ன செய்வதெனத் தெரியாது மயங்கினர். தோழர்களுள் ஒருவன் சிறிது பொழுது சென்று மாணிக்கத்தை உலுக்கி யெழுந்திருக்கும்படி சொன்னான். மாணிக்கம் அவன் கட்டளையைக் கவனித்ததாகவே காட்டிக்கொள்ள வில்லை. அக்கால் மாணிக்கம் விளையாட்டினால் கழியும் வீண் காலத்தை யெண்ணி ஆழ்ந்த சிந்தனையி லமர்ந்திருக்கும் வேதாந்தியைப் போலக் காணப்பட்டான். தம்பியின் செய்கையைக் கண்ட முன்னோன் சீற்றம் மூண்டெழுந்தது. 'மாணிக்கம், உடனே மரத்தை விட்டு இறங்கிவிடு. இல்லையேல் வெளுத்து வாங்கி விடுவேன்.' இது சீற்றத்தி லெழுந்த சக்கரவர்த்தியின் கட்டளை. இதைச் செவி மடுத்த மாணிக்கம் மரத்தில் தனக்கு ஏற்ற இடத்தில் நகர்ந்து அமர்ந்தானே யொழிய இறங்கியபாடில்லை. சக்கரவர்த்தி தான் முன் பிறந்த உரிமையை விட்டுக் கொடுக்க இசையவில்லை. ஆனால் அதே வேளையில் மாணிக்கத்தை யடிக்கவும் அவன் மனமிடந்தா வில்லை. இந்த நெருக்கடியான வேளையில் சக்கரவர்த்தியின் மூளை விரைவாக வேறு வழியில் வேலை செய்யத் தொடங்கிற்று. இதைக் கொண்டு தன் தம்பிக்குத் தக்க தண்டனையையும், தன் தோழர்கட்கு அதிக விளையாட்டையும் மகிழ்ச்சியையு மளிக்க விரும்பினன். உடனே சக்கரவர்த்தி மாணிக்கத்தோடு மரத்தையு முருட்டி விட தன் நண்பர்கட்குக் கட்டளை யிட்டான். மாணிக்கம் இவ் வேற்பாட்டைக் கேட்டான், மரம் உருட்டப் படும்போது தான் கீழே விழாது நன்கு பற்றிக் கொண்டிருப்பின் தன் மதிப்பு உயருமென நினைத்தான் பேதை! உலகோர் போற்ற வாழ வேண்டு மென்று எச் செயலையும் ஆராயாது செய்யத் துணியும் சில அறிவிலிகளைப் போல இச் செயலால் தீங்கு நேரு மென்று கருதிலன் மாணிக்கம்.

சிறுவர்கள் யாவருங் கூடி தங்கள் முழு வலியுடன் மரத்தைத் தள்ளத் தொடங்கினர். 'ஒன்று, இரண்டு, ஓடு' என்றவுடன் மரம் ஓடிற்று. மரம் ஓடியதோடு மாணிக்கத்தின் வேதாந்தம், மதிப்பு இவை யாவும் ஓடி மறைந்

தன. சக்கரவர்த்தியைத் தவிர மற்றையோர் யாவரும் கட்டுக் கடங்கா மகிழ்ச்சி கொண்டு கை கொட்டிச் சிரித்தனர். ஆனால், நம் சக்கரவர்த்தி உள்ளம் நடுங்கியது. இனி என்ன நடக்குமென அவனறிவான். மாணிக்கம் 'வாள்' என்ற குரலுடன் மண்ணிலிருந்து எழுந்தான். சக்கரவர்த்தியின் மேல் பூனை போல் பாய்ந்து முகமெல்லாம் புரண்டித் தள்ளினான்; வேண்டிய மட்டும் அடித்தான், உதைத்தான். அழுது கொண்டே வீட்டை நோக்கி யோடினன். நாடகத்தின் முதற்காட்சி முடிந்தது.

சக்கரவர்த்தி ஒருவாறு சமாளித்துக்கொண்டு முகத்தைத் துடைத்துக் கொண்டான். பக்கத்திலுள்ள பட்ட மரத்திலமர்ந்து பசும்புல்லை கடித்த படியே ஆழ்ந்த சிந்தனையிலாழ்ந்தான். அது காலை அவனிருக்குமிடம் நோக்கியொரு படகு வந்தது. அப் படகினின்றும் நடுத்தர வயதுடையவரும், நரைத்த தலையும், கருத்த தாடியுடையவருமாகிய ஒரு புதியவரிறங்கினார். அவர் நம் சக்கரவர்த்தியை நோக்கி, 'சக்கரவர்த்தி எங்கே வதிகின்றா' னெனக் கேட்டார். சக்கரவர்த்தியோ பசும் புல்லை மென்ற படியே, 'அதோ அங்கே' யென்றான். ஆனால் அவன் கூறியதிலிருந்து எவ் வழியைக் குறித்தா னெனக் கூறுவது கடினமே. அப் புதியவர் மீண்டும் தன கேள்வியைக் கேட்டார். சக்கரவர்த்தி கால்களை யாட்டியபடியே, 'போய்க் கண்டு பிடியுங்கள்' என்று கூறிவிட்டு முன் போலவே பசும் புல்லைச் சுவைக்கத் தொடங்கினான்.

இதற்கிடையில் சக்கரவர்த்தியின் வீட்டு வேலையாள் அங்குற்று சக்கரவர்த்தியை அவன் தாய் அழைத்து வரக் கூறியதாகச் சொற்றனன். சக்கரவர்த்தி தன் இருக்கையை விட்டு எழுபவனாகக் காணப்படவில்லை. இப்போது வேலையாள் தலைவனாக மாறினன். குண்டு கட்டாகத் தூக்கிச் செல்லப்பட்டான் சக்கரவர்த்தி.

வீட்டை யடைந்ததும் சக்கரவர்த்தியின் தாய் மிக்க சீற்றங் கொண்டவளாய், 'மறுபடியும் மாணிக்கத்தை யேன் அடித்தாய்?'

சக்கரவர்த்தி நாகம்போல் சீறி, 'நான் அவனை யடிக்க வில்லையே. நான் அடித்ததாகக் கூறியது யார்?'

அவன் தாய்:—சீ நாயே! பொய் பேசாதே, நீ தான் மாணிக்கத்தை நையப் புடைத்தாயாமே.

சக்கரவர்த்தி (விரைவாக):—அம்மா! நான் சொல்வதை நம்பு. நான் மாணிக்கத்தைத் தொடவே யில்லை. நீயே அவனை வேண்டுமானாலுங் கேட்டுப் பார்.

இப்போது மாணிக்கம் முன்னர் கூறியதையே உறுதிப் படுத்துவான் போல், 'அம்மா, அண்ணன் என்னை அடித்தது உண்மை தான்' என்றனன்.

சக்கரவர்த்தி தன் பொறுமையை யிழந்தான். மாணிக்கத்தின் மேல் கை வைக்காதிருக்கும் போதே, மாறாக மாணிக்கமே தன்னை யடித்திருக்கும் போதே நையப் புடைத்ததாகக் கூறின் கடுஞ் சீற்றங் கொள்ளா திருக்க முடியுமா? மாணிக்கத்தின் மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து நாலைந்து அடி வைத்தான். 'பொய் கூறியதற்குப் பரிசாக இவ் வடிகளைப் பெற்றுக்கொள்' என்று அடிக்கும் போதே கூறினன்.

சக்காவர்த்தியின் தாய் உடனே மாணிக்கத்தின் பக்கம் சேர்ந்து கொண்டா ளென்று கூறஞ வரவேண்டும்? அவனை மறு பக்க மிழுத்து விட்டு முதுகில் இரண்டு வைத்தாள். தன் கையை விடுவித்துக் கொள்ள நம் சக்காவர்த்தி தன் தாயின் கையை யுதறினன். இதனுல் அவன் தாய் சற்று பின்னே தள்ளப்பட்டாள்.

'அடே போக்கிரிப் பயலே, பெற்ற தாயையே அடிக்கத் துணிந்து விட்டாயா' வெனக் கூறிப் பாய்ந்தாள். இந் நெருக்கடியான தருணத்தில் நரைத்த தலையை யுடைய அப் புதியவர் தோன்றி நடந்த தென்னவென்று கேட்டார். சக்காவர்த்தி ஒன்றுங் கூறத் தோன்றாது ஆடு போல் விழித் தான். வெட்க மொருபுறம் அவனைப் பேச வொட்டாது தடுத்தது.

சக்காவர்த்தியின் தாய் வந்த பெரியவரை உற்று நோக்கினள். அவ ளுடைய சீற்ற மெல்லாம் இறும் பூதாக மாறியது. தன் உடன் பிறந்தானை நெடுநாள் காணுது இப்போது வந்த உடன் பிறந்தானை கண்டால் இறும்பூ தடையக் கேட்கவா வேண்டும்? "அண்ணு, வாருங்கள் வாருங்கள்" எனக் கூறியபடியே காலில் விழுந்து வணங்கி கால்களைத் தொட்டுக் கண்களி லொற்றிக் கொண்டாள்.

சக்காவர்த்தியின் தாய்க்குத் திருமணம் நடந்த காலத்தில் அவள் அண் ணன் பம்பாயில் வியாபாரம் நடத்தி வந்தான். அனேக காலங் கடந்தது. தங்கை தன் தலைவனை யிழந்தாள். பிச்சை—ஆம்; அது தான் அவன் பெயர் திரும்பவும் கல்கத்தா வந்தான். எங்கும் தன் தங்கையைப் பற்றி உசாவி னன். எங்கிருக்கிறு ளென்று தெரிந்ததும் ஓடோடியும் வந்தான்.

சில நாள் வரை வீட்டில் விருந்தும், களியாட்டமுமாகவே யிருந்தது. பிச்சை தன் மருமகப்பிள்ளைகளின் படிப்பைப் பற்றி யறிய விரும்பினன். மாணிக்கம் மாணிக்கமாகவே யிருப்பதாகவும் ஆனுல் சக்காவர்த்தியே குறும்புக்குச் சக்காவர்த்தியாக விருப்பதாகவும், அதனுல் பற்பல கேடுகள் விளைவதாகவுங் கூறினள். பிச்சை, சக்காவர்த்தியைத் தன்னுடனழைத் துச் சென்று, தன் பிள்ளைகளுடன் கல்கத்தாவிலேயே படிக்க வைப்பதாக ஒப்புக்கொண்டான். தலைவனை யிழந்த தாயும் உடனே தன் அனுமதியைத் தெரிவித்தாள். சக்காவர்த்தியை ஊருக்கு வருகிறுயா வெனக் கேட்கவே அவனுக்குத் தலை கால் புரிய வில்லை. உடனே புறப்படுவதாக மிக்க மகிழ்ச் சியுடன் தெரிவித்தான்.

சக்காவர்த்தி தன்னை விட்டு அகன்றிருப்பதில் அவன் தாய்க்கு மிக்க மகிழ்ச்சி. எப்போது மிடர் செய்யும் சக்காவர்த்தியைப் பிரிந்திருப்பதே தனக்கொரு ஆறுதலென எண்ணினள். ஆனுல் அண்ணன், தம்பிகட்குள் ளிருந்த அன்பு ஒளி துளிக் கூட மாறிற்றிலது. சக்காவர்த்தி, மாணிக் கத்தை என்று ஆற்றில் ஆழ்த்தி விடுவானே, அவன் மண்டையை எந்நாள் சிதற வடிப்பானே என்றே ஒவ்வொரு நாளும் அவன் தாய் நினைப்பாள். இதுவுமன்றி தன் மூத்த பிள்ளை மாமனுடன் போகத் துடியாய்த் துடிப்ப தைக் கண்ட அவள், 'போகிற கழுதை போகட்டுமே' யென்றெண்ணினள்.

ஊருக்குப் போவதாக முடிவாகவே நம் சக்காவர்த்தி, 'எப்போது மாமா ஊருக்குப் போவது, எப்போது மாமா ஊருக்குப் போவது' என்று

உச்சரித்து வந்தான். ஊருக்குப் போகப் போகிறோமென்ற எண்ணத்தில் அவன் தலை தூக்கி நடப்பான். அநேக இரவுகள் தூக்கமின்றியே கழிந்தன. மாணிக்கத்தை யருகழைத்துத் தன்னுடைய கடைசிப் பரிசாக, துண்டிற் சுழி, பெரிய காற்றாடி தான் அருமையாகச் சேர்த்து வைத்திருந்த கோலிக ளிவைகளை யளித்து மகிழ்ந்தான். பிரியுந் தருணத்தில் உடன் பிறந்த அன்பு கரை கடந்ததாயிற்று.

கல்கத்தா சேர்ந்த போது நம் சக்கரவர்த்தி முதல் முதலாகத் தன் அத்தையை யறிமுகஞ் செய்து கொண்டான். அத்தை இவனைத் தன் குடும்பத்திற்கொரு புது சுமையாகவே கருதினள். தன்னுடைய மூன்று குழந்தைகளைக் கட்டிக் காப்பதே அவளுக்குப் போதுமென்றாகி விடும். அப்படியிருக்க சக்கரவர்த்தியும் சேர்ந்தால் அவளுக்கு எப்படியிருக்கும்? பதினான்கு வயது சிறுவனொருவன் அக் குடும்பத்தில் புதிதாக வந்து சேர்ந்தால் நன்றாக விருக்குமா? பிச்சை இதைப்பற்றி முன்னரே நன்கு சிந்தித்திருக்க வேண்டும். துணிந்த பின் எண்ணுதல் இழுக்கல்லவா?

இவ் வுலகில் 14 வயதுப் பையனென்றால் எவருக்குமே பிடிக்காது. அவ் வயதில் பிள்ளைகள் அழகாகவு மிருப்பதில்லை. அதோடு கூட அவர்களால் ஒரு பயனும் அப் பருவத்தில் விளைவதில்லை. குழந்தைகளிடத்துச் செலுத்துமன்பு அவர்களிடம் செலுத்துதல் கடினம். இவர்கள் அக் காலத்தில் எப்பொழுதும் குறுக்கே வந்து நிற்பர். குழந்தைகளைப் போலிவர் பேசிடின், 'பாப்பா கொஞ்சுகிற' தென்கிறோம். சற்று முதிர்ந்தவர்களைப் போல் பேசி விட்டாலோ 'அடங்காப் பிடாரி' யென்கிறோம். சுருக்கமாக அவன் பேச்சை யாரும விரும்புகின்றார்களில்லை. அன்றியும் இப் பருவக் குழந்தைகள் மட மட வென வளர்ச்சி கொள்கின்றன. முன்னர் தைத்த சட்டைகளெல்லாம் இவனுக்கு இப்போது சரிப்பட்டுவருவதில்லை. இந் நாளிலே தான் பால பருவத்தொனி மறைந்து புதுக் குரல் பெறுகிறான். முகமும் மாறுத லடைகின்றது. சிறு குழந்தைகள் செய்யும் பெரிய பெரிய குறும்புகளையும் மன்னித்து விடும் நாம் இப் பருவத்திலவர்கள் இயற்கையாக மாறுதற்குக் கூட குற்றங் காண்கின்றோம். 14 வயது வந்ததும் தன்னம்பிக்கை யதிகங் கொள்கின்றான். எப்பொழுதாவது பெரியவர்களுடன் பேச நேர்ந்தால் எல்லாந் தெரிந்தவனைப்போ லொரு வேளையிலும், சில வேளைகளில் தனக்குத் தெரிந்ததையும் வெட்கங் காரணமாகத் தெரியாதவன் போலவும் நடந்து கொள்கின்றான். சில வேளைகளில் உலகில் ஏன் பிறந்தோ மென்று கூடக் கருதுவதுண்டு. இருப்பினுமிப் பருவத்திற்றான் அன்பிற்கும், ஆதரவிற்கும் இடமுண்டு. எவரொருவர் இப் பருவக் குழந்தையிடம் அன்பு செலுத்துகிறாரோ அவருக்கு அக் குழந்தை அடிமையாகின்றது. ஆனால் வெளிப்படையாக ஒருவருமிவனிடமன்பு செலுத்துவதைக் காணோம். இப்படி வெளிப்படையாக அன்பு செலுத்தினால் குழந்தை செல்லங் கொடுப்பதாக எண்ணி விடுமாம். ஆகவே குழந்தை கெட்டு விடுமாம். எப்பொழுதும் வசவும், திட்டுமாக அவன் காலமிப் பருவத்தில் கழியும். தனி யிடத்தில் வாழ்ந்த வேட்டை நாய் தன் தலைவனை யிழந்த கதையாக அவன் காலங் கழிக்கின்றான்.

பதினொன்று வயது சிறுவனுக்குத் தன் சொந்த வீடே சொர்க்க லோகம். புது வீட்டில், புது மக்களுடன் பழகுவது நரக வேதனையாகவே யிருக்கும். பெண்களின் கருணை கூர்ந்த நோக்கையே பொன்னுலகாகக் கருதுமவனுக்குப் புது வீட்டில் அப் பெண்கள் திரும்பிக் கூடப் பார்க்காவிடில் எப்படி யிருக்கும்?

நாளும் வெறுத் தொதுக்கியும், வீட்டிற்கே வொரு சுமையாகவுங் கருதப்பட்டு வந்த சக்கரவர்த்தி தன் அத்தை வீட்டிற்கு அழையா விருந்தாய் நுழைந்து கொண்டிருக்கப் பிடிக்கவில்லை. அத்தி பூத்தாற் போலெப்பொழுதாவது அவன் அத்தை யவனை ஒரு வேலை செய்யும்படி சொல்லின் அடங்கா மகிழ்ச்சி கொள்வன். அம் மட்டற்ற மகிழ்ச்சியால் காரியங் கெடும். அவ் வேளைகளில் அத்தை யவனை 'மூட்டாளாக நடந்து கொள்ளாதே' யென புத்தி கூறிப் பாடத்தைப் படிக்கச் செய்வாள்.

இவ்வாறு வெறுத்துத் தள்ளப்பட்ட சக்கரவர்த்தி வேண்டாத மனைவியைப் போல் காலங் கழித்து வந்தா னென்று கூறின் மிகையன்று. வெட்ட வெளியில் ஓடியாடித் திரியப் பெரிதும் அவன் மனம் விரும்பும். ஆனால் கல்கத்தா போன்ற பெரிய பட்டணங்களில் திறந்த வெளிக்கு எங்கே? நாளுமிரவில் தன் கிராமத்தையும், வீட்டையும் கனவு கண்டு தானங்கு செல்லப் பெரிதும் விரும்புவன். ஒவ்வொரு பொழுது தான் பட்டம் பறக்க விட்ட பெரிய திடலையும் ஆழ்ந்து மூழ்கிய அகன்ற ஆற்றையும் அதன் அழகிய கரையையும், அக் கரையில் தான் நாள் முழுவதும் ஓடியாடித் திரிந்து வானம்பாடியைப் போல் வாழ்ந்ததையும் தன் ஊர் குளத்தையும், அதில் தான் குதித்து விளையாடிய காலத்தையும் நினைத்து நினைத்துப் பெருமூச்செறிவான்.

ஒரு வேளை தன்னுடன் சேர்ந்து விளையாடிய தோழர்கள் நினைவு வரும். அப்போது எவ்வாறு அவர்கள் தலைவனாக விளங்கினு னென்றதை நினைத்து நினைத்து நெஞ்சுருகுவான். இவற்றை யெல்லாம் விட தன் கொடியதாயின் உருவே அடிக்கடித் தோன்றியது. தன்னை வஞ்சனையால் கல்கத்தா அனுப்பிய தாயை நினைக்க நினைக்க அவன் ஆத்திரமடங்கவில்லை. இருப்பினும் விலங்குகளிடையே நிலவு மொருவகை யன்பு மட்டும் அவனிட மடிக்கடி தோன்றியது. தன்னை யொரு காலத்தில் அன்புடனணைத்து ஆதரித்தவர்களின் முன்னிலையி லிருக்க அவன் மனம் பெரிதும் ஏக்கற்றது. இப்படி அன்புடனிருந்தவர்கள் நீண்ட நாள் பிரிந்திருக்க நேர்ந்தால் ஏற்படு மொருவகை தாபமும் அவனை யடிக்கடி வருத்தியது. தாயை யிழந்த கன்றென அவனுள்ளங் கரைந்துருகிற்று. இவ் வன்பு நாளும் அவனை உருக்கியது. இதை யறிய வொருவராலு மாகவில்லை. ஆனால் இவ் விடை விடா அன்பு அவன் மனதையே வுண்டு உயிர் வாழ்ந்து வந்தது.

சக்கரவர்த்தி தன் பள்ளிக்கூடம் முழுவதும் வடிகட்டிய மூட்டா ளென்று பெயர் வாங்கினன். ஆசிரியர் கேள்விகள் கேட்டால் விழிப்பான். அதற்காகக் கொடுக்கும் அடிகளைப் பொறுமையுட னேற்றுக்கொள்வன். மாலை வேளைகளில் மற்ற சிறுவர் விளையாடித் திரிவதை இவன் மாமன் வீட்

டுப் பலகணிக் கம்பியைப் பற்றிக்கொண்டு பார்த்திருப்பன். அவர்களுடன் இணைந்து விளையாட அவன் உள்ளம் விழைந்தது.

சக்கரவர்த்தி ஒரு நாள் தன் மனவுறுதியை யொருவாறு வருவித்துக்கொண்டு தன் மாமனை நோக்கி, 'மாமா, நான் எப்போது ஊருக்குப் போவது' என்று கேட்டான்.

பிச்சை:—'விடு முறை நாட்கள் வரட்டும்; அப்போது போகலாம்' மார்கழி வரை விடுமுறை வரும் வழியாயில்லை. அத்திங்கள் வர இன்னு மனேக திங்களிருந்தன. அவனுடைய கெட்ட காலமோ என்னவோ, ஒரு நாள் சக்கரவர்த்தி தன்னுடைய புத்தகத்தைத் தொலைத்து விட்டான். புத்தகங்க ளிருக்கும்போதே படிக்காத நம் சக்கரவர்த்தி புத்தகங்கள் தொலைந்தால் படிப்ப தெப்படி ?

ஒவ்வொரு நாளும் அவன் ஆசிரியர் சிறிது கூட கருணை காட்டாது வெளுத்து வாங்குவார். அவன் படும் அடியைக் கண்டு மனமிரங்கி பிரம்பும் (மனம்) முறியும். இப்படியாக நம் கதைத் தலைவன் யாவராலும் வெறுக்கப்படவே, அவனுடைய மாமன் மக்கள் கூட தங்கள் அத்தை பிள்ளை யென்று கூறிக் கொள்ள மனங் கூசினர். மற்ற பிள்ளைகளை விட இவர்களே நம் சக்கரவர்த்திக்கு அதிகமான இடர் விளைத்து வந்தனர். இறுதியாக சக்கரவர்த்தி தன் அத்தையை யணுகித் தன் புத்தகம் தொலைத்து விட்டதாகக் கூறினன்,

அத்தை:—அடா நாட்டுப் புறத்துக் கழுதை! நான் இங்க னொன்றிற்கு உனக்கு ஐந்து புத்தகங்கள் எப்படி வாங்கி யழுவேன். என் குடும்பத்தைக் கட்டிக் காப்பதே எனக்குப் போதும், போது மென்றிருக்கிறதே. இச் செலவையும் நான் எப்படித் தாங்குவேன்? எனக் கடிந்தாள்.

அன்று மாலை. சக்கரவர்த்தி வீடு திரும்புகிறான். அது போது சிறிது தலைவலியும் அத்துடன் லேசான காய்ச்சலும் அடிப்பதாக அவனுக்குத் தோற்றியது. ஒரு வேளை இச் சிறு காய்ச்சலே பெருங் காய்ச்சலாக மாறுமோ வென்றும் அவன் மனம் நினைத்து நடுங்கியது. இக் காய்ச்சலை விட அத்தையின் காய்தலே இவனை யின்னும் நடுக்கத்திற் குட்படுத்தியது.

பொழுது புலர்ந்தது. ஊரெங்கும் சக்கரவர்த்தியைத் தேடித் தேடியலைந்தனர். அக்கம் பக்கத்திலும், ஆறு குளங்களில் தேடியதும் கூட வீணாயிற்று. இரவு முழுவதும் மழை 'சோ' வெனப் பெய்து கொண்டிருந்ததால் தேடச் சென்றோர் யாவரும் நீர் சொட்டச் சொட்ட வீடு திரும்பினர். இதைக் கண்ட அவன் மாமன் கண்ணீர் சொட்டினான். கடைசியாக அவன் ஊர் காப்பாளரிடம் உதவியைக் கோரினன். மறுநாள் பொழுதும் புலர்ந்தது. இன்னும மழை விட்டபாடில்லை. கதிரவனும் அவர்கள் துயர் கண்டு தன் கதிர்க் கண்களை மூடினன். அந்நிவேளை அந் நேரத்தில் பிச்சை வீட்டிற் கெதிரில் ஒரு வண்டி வந்து நின்றது. இரு ஊர் காப்பாளர் (Police constables) சக்கரவர்த்தியைத் தூக்கிவந்து கூடத்தில் படுக்கையில் கிடத்தினர். அவன் உடல் முழுவதும் மழையினுல் நனைந்திருந்தது. அத்துடன் சேறும், சகதியும் படிந்திருக்க, கண்கள் கோவைப் பழம்

போல் சிவந்திருந்தன. கை கால்களெல்லாம் காய்ச்சலால் நடுங்கின. இந்நிலையில் கண்ட அவன் அத்தை, 'இச்சிறு கழுதை என் குடும்பத்திற்கு எவ்வளவு தொல்லையை விளைவித்திருக்கிறான். இவனை ஊருக்கு அனுப்ப மாட்டீர்களா' என்று தன் கணவனை நோக்கிச் சீறினள்.

உடனே சக்கரவர்த்தி, 'மாமா, நான் ஊருக்குப் போகத்தான் போனேன். ஆனால் இம் முரடர்கள் என்னை அவ்வாறு செய்யாது தடுத்து இங்கு கொண்டு வந்து விட்டார்க'ளெனக் கூறி அவ்விரு ஊர் காப்பாளர்களையுஞ் சுட்டினன்.

காலை வெய்யில் போல் காய்ச்சலு மேறிற்று. பிச்சை மருத்துவரொருவரை யழைத்து வந்து காட்டினன். சக்கரவர்த்தியோ, 'மாமா, மாமா, நான் ஊருக்குப் போகலாமா, விடுமுறை வந்து விட்டதா' வென்று பிதற்றினன். பிச்சை கண்ணீரைத் துடைத்தபடியே அவன் கையையெடுத்து மார்போடணைத்துக் கொண்டான். அக்கை அனலிடையிட்ட இரும்பென விருந்தது. அந் நாளிரவு பிச்சைக்கு 'சிவராத்திரியாயிற்று' சக்கரவர்த்தியின் பிதற்றல் ஓய்ந்தபாடில்லை. 'அம்மா, அம்மா, என்னையடிக்காதே, நான் உண்மையையே சொல்லுகிறேன்' என்று அலறுவான்.

மறுநாட்காலை சக்கரவர்த்தி சிறிது தன்னறிவைப் பெற்றான். அவனுடைய சின்னஞ் சிறு கண்கள் எதையோ தேடுவன போன்று அவ் வறை முழுவதுந் திரிந்தன. இதை யுணர்ந்த பிச்சை, 'தம்பி, உன் தாய்க்கு ஆளனுப்பி யிருக்கின்றேன்; பயப்படாதே' என்று தேற்றினன். பொழுதும் போய்க் கொண்டே யிருந்தது. மருத்துவரும் கை விட்டார்.

சக்கரவர்த்தி மேலே பார்த்தபடி, என்னையா அழைக்கிறீர்கள்? இதோ வந்தேன்.—அத்தை, நான் பள்ளிக்கூடம் போய் வருகிறேன்—மாமா, விடுமுறை வந்து விட்டதா ஊருக்குப் போகட்டுமா' வென்று தொடர்பில்லாது பிதற்றத் தொடங்கினன்.

சக்கரவர்த்தியின் தாய் புயற்காற்றைப் போல் அவ் வறையில் நுழைந்தாள். அழுதாள், விழுந்தாள், புரண்டாள். 'மகனே, என்னை விட்டுப் பிரிவாயோ? இதற்குத்தானா உன்னை இங்கு அனுப்பினேன். உன்னை வெறுத்தொதுக்கினே னென்று வஞ்சந் தீர்க்கவோ என்னை வெறுத்துப் போக நினைத்தாய். கண்ணே, இங்கு பாரடா. என்னுடன் ஒரு வார்த்தை பேசடா' வென்று கதறினள். சக்கரவர்த்தி கைகளை ஒரு நிலையிலமைத்தான். 'ஆ' வெனப் பெருமூச் செறிந்தான்.

'கண்ணே! இதோ பார்; உன் தாய் அழைக்கிறேனடா திரும்பிப் பாரடா.'

மெதுவாக அவன் தலை திரும்பிற்று. ஆனால் அவனது பஞ்சடைந்த கண்கள் உலகிலுள்ளோரைப் பார்ப்பதாகப் புலப்படவில்லை. வாய் மட்டும் 'அம்மா விடுமுறை நாட்கள் வந்து விட்டன' என்று முணு முணுத்தது.

[இது இரவீந்திர நாத் தாகூர் எழுதிய 'Home Coming' என்பதைத் தழுவியது.]

# டார்வின் துரை

(தா. மா. அப்பாவு.)

விஞ்ஞான விற்பன்னர்களை ஓயாது உற்பத்தி செய்து வந்த ஐரோப்பா, யுத்த மேகங்களினால் அருள் ஒளி மறைக்கப்பட்டு அந்தகாரத்திலே தவிக்கிறது. மக்களுக்கு நன்மை செய்து வந்த விஞ்ஞானம் இன்று மக்களைக் காட்டுமிராண்டித்தனமாக கொலை செய்ய பயன்படுத்தப் படுகிறது. இதைவிட்டு ஆராய்ச்சி மூலம் மக்களுக்கு அறிவு துலக்கிய ஓர் அறிஞனைப்பற்றி சிறிது தெரிந்து கொள்ளுவோம்.

ஷ்ரூஸ்பரி என்பது இங்கிலாந்தில் உள்ள ஓர் நகரம். அங்கு 1809-ம் ஆண்டு ராபர்ட் வேரிங் டார்வின் என்பவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. இக் குழந்தைதான் பிற்காலத்தில் சார்லஸ் டார்வின் என்ற பெயருடனே உலகிற்கு ஓர் ஒப்பற்ற உண்மையினை உணர்த்திற்று.

சிறுவன் டார்வினுக்கு பூக்களின் மீதும் பறவைகளின் மீதும் அதிகப் பிரியம். ஆனால் குறுகிய வழியில் பாடங்களைப் போதித்து வந்த அவ்வூர் இலக்கணப் பாடசாலையில் அவன் வாசித்த ஏழாண்டுகளும் பயனற்றுப் போயின. அப் பாடசாலையில் விஞ்ஞானம் போதிக்கப்படாமையால் அவனது ஆற்றல் வெளிப்படவில்லை. பாறைகள், பொருள்கள், செடி கொடிகள் முதலியவைகளைப் பார்த்துக்கொண்டிருப்பது அவனது பொழுது போக்கு.

பின்னர் அவன் எடின்பரோவுக்கு மருத்துவம் பயிலச் சென்றான். ஆங்கிருந்து ரணசிகிச்சை சாலை அவனுக்குப் பீதியளித்தது. பிரசங்கங்களும் பயனற்றவை என்று அவன் கண்டான். ஆகையினால் மருத்துவன் (doctor) ஆகலாம் என்ற எண்ணத்தையே அவன் விட்டு விட்டான். எடின்பரோவின் அவன் பெற்ற ஒரு நன்மை, இறந்த பறவைகளைப் பதம் செய்யக் கற்றுக் கொண்டதுதான்.

மனமுடைந்த அவன் தந்தை அவனைப் பாதிரிக் கலாசாலையில் பயிலுமாறு கேம்பிரிட்ஜுக்கு அனுப்பினார். இங்கும் பழைய கதைதான். எனினும் அவன் 1831-ம் ஆண்டு B. A. பட்டம் பெற்றான். இத்துடன் அவனுக்கு தாவரநூல், நிலநூல் பண்டிதர் (Professors)களின் நட்பும் கிடைத்தது.

அவ்வருடம் (1831) தென் அமெரிக்காவின் கடற்கரை யமைப்பை அறிந்து வர ஓர் கப்பல் புறப்பட்டது. அதில் டார்வின் இயற்கையாளனாய் (naturalist) அமர்ந்தான். இச்சம்பவம் அவனது வாழ்க்கையில் மிகப் பெரிய மாறுதலை உண்டாக்கிற்று.

இக் கப்பல் டெவன் துறைமுகத்தைவிட்டுப் புறப்பட்டு எரிமலையின் துன்புறத்தலினால் கரிந்துபோன மண்ணையுடைய கேப் வெர்டி தீவுகளை முதலாவதாக அணுகிற்று. அத் தீவுகள் மனித சஞ்சாரமற்று புல் பூண்டுகளற்று இருந்தது டார்வினுக்கு புதுமையாகத் தோன்றியது. பின்னர் பாஹியாவின் உஷ்ணமண்டலக் காடுகளையும் விஷநோய் பரவி யிருந்த

ரியோடி ஜெனிரோ என்ற துறைமுகத்தையும் பார்த்துக்கொண்டு வந்தான். நிர்வாணமான காகோஸ் என்னும் ஜாதியார் அர்ஜன்டைனாபுல் வெளிகளில் போலாஸ் என்னும் ஆயுதம் கொண்டு வேட்டை யாடுவதைக் கண்டான்.

படகோனியாவில் மறைந்துபோன (extinct) ஒரு பெரிய மிருகத்தின் உடற்கூட்டைக் கண்டான். இதிலிருந்து மறைந்து போனதற்கும் உள்ளவைகளுக்கும் உள்ள வேற்றுமையை யாராய்ந்து வந்தான். பின்னர் புல்பூண்டுகள் முளைக்காத பாக்லண்டு தீவுகளையும், பூகம்பத்தினால் அழிந்துபோன பூகோ தீவுகளையும் மனித வர்க்கத்திலேயே மிகவும் கீழ் நிலையில் உள்ள நீக்ரோவர்களையும் கண்டு வந்தான். போலாஸ் தீவுகளில் கடற்செடிகளை உண்ணும் பல்லிகளும், மனிதர்களுக்கு பயப்படாத பறவைகளும், பயங்கர உருவத்தோடு கூடிய பெரிய ஆமைகளும் இருப்பதைக் கண்டான். கடைசியாக அக் கப்பல் 1836-ம் ஆண்டு இங்கிலாந்து திரும்பியது.

அவன் கேம்பிரிட்ஜில் நிலையாகத் தங்கியபோது முற்றிலும் மாறுபட்டிருந்தான். அற்புதமான சுற்றுப் பிரயாணத்தினால் அவன் கண்டதும் கேட்டதும் தவிர சுயேச்சையாகச் சிந்திக்கவும் நுணுக்கமாக ஆராயவும் தர்க்கரீதியாக காரணங் காணவும் முயன்றான்.

பசிபிக் சமுத்திரத்திலுள்ள கலபோகாஸ் தீவுகள் ஒவ்வொன்றும் தனக்கென சிறப்பாக தனித்த வகையான பறவைகளையும் ஆமைகளையும் பெற்றிருப்பதை அவன் கண்டிருக்கிறான். இதற்குக் காரணம் என்ன? இப் பறவைகள் எல்லாம் ஒரே பொதுப் பூமியிலிருந்து வந்து காலடைவில் தங்களிருப்பிடத்திற்குத் தக்கவாறு மாறுதலடைந்தனவென்பதே அவனுடைய வாதம்.

அவனுடைய, எண்ணங்கள் மெதுவாக உருவாகத் தொடங்கின. 1837-ம் ஆண்டு தெளிவான தனது உண்மைகளை எழுத ஆரம்பித்தான். 19 ஆண்டுகள் கழித்து (1859) தனது அரிய ஆராய்ச்சியிற் கண்ட உண்மைகளை "வகைகளின் பிறப்பு" என்ற பெயருடன் ஓர் நூல் வெளியிட்டான். 1876-ம் ஆண்டுக்குள் அந்நூலின் 16000 பிரதிகள் இங்கிலாந்தில் மட்டும் செலவாயின என்றால் அதன் உயர்வினை உன்னி யறிக. இந்நூல் உலகத்திலுள்ள முன்னேற்ற மடைந்த மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கப்பட்டது.

மனித வர்க்கமும் குரங்கு வர்க்கமும் ஒரே வகையான மூல ஜந்துக்களிலிருந்து உற்பத்தியாயின என்று அந்நூலில் டார்வின் விளக்கியிருந்தான். குரங்குகளினின்று மனிதன் தோன்றினான் என்று டார்வின் சொல்லியதாகச் சிலர் தவறாக எண்ணினர். ஆயினும், நாளாக ஆக இவ்வறியாமை நீங்கி மக்கள் டார்வின் சொல்லியதை ஒப்புக்கொண்டனர்.

பள்ளிக்கூடத்தில் மடையனாயிருந்து, பின்னர் தனது ஆராய்ச்சியினால் நவீனகால மக்களிடையே ஓர் புரட்சியை யுண்டாக்கிய சார்லஸ் டார்வின் தனது 74-ம் ஆண்டில் இறக்க வெஸ்ட்மின்ஸ்டர் மாதாகோவிலில் புதைக்கப்பட்டான்.

---

# மனக்கோட்டையும் ஏமாற்றமும்

(ஜி. அழகிரிசாமி.)

## 6

"சிரஞ்சீவி வேணுவுக்கு அநேக ஆசீர்வாதம்.

"சடகோப ஐயங்கார், தாம் கொடுத்த கடனுக்காக நம் சொத்துக்கள் மீது கேஸ் தொடுக்கப்போவதால், அது சம்பந்தமாய் வரவு செலவு செய்ய நீ அவசியம் ஊர்வந்து சேரவேண்டும். நான் தனிமையாக என்ன செய்ய முடியும்? கடிதம் கண்டவுடனே புறப்படு. மற்ற விஷயங்களை நேரில் பேசிக் கொள்வோம்.

இப்படிக்கு
உன் தாயார், ராமானுஜபுரம்."

என்று கடிதம் வேணுவுக்குக் கிடைத்தது. கோடை விடுமுறைக்கப் புறம், பி. ஏ. வகுப்பில் உட்கார்ந்து, சென்னைக் கடற்காற்று வீச வாழ்க்கையை மறுபடியும் ஆரம்பித்த வேணுவுக்கு அந்தக் கடிதம் வர்ம அடி மாதிரி இருந்தது. என்ன செய்வான்? தன் கல்லூரிப் படிப்பு அதோடு சரி என்று தீர்மானித்துக்கொண்டு, தன்னுடைய பெட்டி, படுக்கை முதலியவற்றை எடுத்துக்கொண்டு மறுநாள் காலை வண்டிக்கு ஊருக்குப் புறப் பட்டான்.

வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டு சென்னை நகரத்தை அதுதான் கடைசியாகப் பார்க்கும் பார்வை யென்று நினைத்துப்பார்த்தான். "எவ்வளவு சந்தோஷமாக வாழ்க்கை நடக்குமென்று எதிர்பார்த்தது! என்ன கனவுகள்! அழகான கட்டடங்கள், விளையாட்டு மைதானங்கள், நாகரிக வாழ்க்கை எல்லாம் இனி இருக்கத்தான் செய்யும். ஆனால் அவை எவனுக்காக உண்டாக்கப்பட் டிருக்கின்றனவோ, அவன் மட்டும் மாறிக்கொண்டே இருக்கிறான். இனி அந்தப் பட்டிக்காட்டுக் கிருஷ்ணன்கோவில்; ஜன்னல் இல்லாத இருட்டு வீடு, பக்கத்து வீட்டில் இருமல் தொந்தரவு, நாட்டுப்புற ஜனக்கூட்டம், பொட்டல் புல்வெளி, சே சே, எவ்வளவு மோசமான நிலைமைக்கு வரவேண்டி யிருக்கிறது........" இப்படிப்பட்ட எண்ணங்கள் அவன் மனத்தில் தொடர்ந்து வந்து தோன்றிக்கொண்டே யிருந்தன. வண்டியும் அவனுடைய 'குட்டிச்சுவ'ருக்கு ஓடிக் கொண்டிருந்தது.

ஸ்டேஷனில் இறங்கி மாலை 4 மணிக்கு வீடு வந்து சேர்ந்தான். அன்றிரவு அவன் வெறி பிடித்தவன்போல் உட்கார்ந் திருக்கும்போது சடகோப ஐயங்கார் வேணுவை அழைத்து வரும்படி சொல்லி அனுப்பினார். அவனும் போனான்.

"வாடா, அப்பா! இப்போதான் வந்தாயா?"

"ஆமாம்."

சிறிது நேர மௌனத்திற்கு அப்பால்,

"வேணு! நீ படிச்ச பிள்ளைன்னு சொல்றேன்—அப்படி உட்கார்—உன் தாயாருக்கு விவசாயத்தை நிர்வகித்து நடத்தத் தெரியமாட்டேன் என்கிறது. அவளுக்கு என்ன தெரியும்? பாவம்! எனக்கு பணம் முன் மாதிரி குறித்த தவணைகளில் கட்டுவது நின்றுவிட்டது. ஒன்றும் மிஞ்ச வில்லையாம்............"

அவர் சொல்வதற்கெல்லாம் தலையசைத்துக்கொண்டே இருந்தான் வேணு.

"அதனாலே நீ படிச்சு முடியற வரைக்கும், ஏன் உனக்கு ஒரு உத்தி யோகம் கிடைக்கிற வரைக்கும் உன் தாயார் ஜீவனத்துக்குக் கொஞ்ச நன் செயும், வீட்டையும் விட்டு வைக்கிறேன். அதை உனக்கே எழுதலாம்னு கூட முன்னாடியே நினைச்சேன்."

"இனி எங்கே போய்ப் படிக்க? உத்தியோகம் சம்பாதிக்கவா?" என்று தன் மனத்தினுள்ளேயே கேட்டுக்கொண்டான் வேணு.

அந்த நேரத்தில் "சாமி, அவுஹ படிப்புக்கும் ஒரு ஏற்பாடு பண்ணிப் போட்டால் நல்லது" என்று 'நாம' சிந்தனையோடு சொன்னார் மாடசாமி பிள்ளை. வேணு-ஊருக்கு வந்தவுடனே அவனிடம் போய் ஆண்டாளைக் கட்டிக் கொள்ளும்படி பயனற்ற உபதேசங்கள் செய்து மாடசாமிப்பிள்ளை திரும்பியதற்கு அப்புறந்தான் சடகோப ஐயங்கார் அவனை வரச்சொன்னது.

"அதுவும், ஏதோ உங்கள் அப்பாவும் நானும் பழகிக்கொண்ட சிநே கத்துக்காக உன் படிப்புச் செலவுக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்து விடு கிறேன். அதை அவருடைய குணத்துக்கும் உன் கெட்டிக்காரத்தனத் துக்கும்தான் தருகிறேன். அதைக் கடன் என்று நினைச்சுக்காதே."

இருள் சூழ்ந்த எண்ணக் கூட்டங்களின் நடுவே ஒரு ஜோதி பிறந் தது. தெய்வம் தன்னை ரக்ஷிக்க அனுப்பிய தேவதூதர்களாக வேணுவின் கண்களுக்குக் காட்சி யளித்தார்கள் ஐயங்காரும் பிள்ளையும்! தனனுடைய அதிர்ஷ்டத்தை, தெய்வத்தின் பேருதவியை நினைத்து உள்ளத்தில் உவகை பொங்க தன் தாயாரிடம் விஷயத்தைத் தெரிவித்தான். அந்தக் களிப்பி லேயே தன் பெட்டியில் ஒரு ஓரத்தில் சுருண்டு கிடந்த, அன்போடு தன் தகப்பனால் அளிக்கப்பட்ட சிறு "திருப்பாவை' யை எடுத்து இரவு முழு வதும் படித்துக் கொண்டிருந்தான் எவ்வளவு தீர்க்க தரிசனமாகத் தன் தகப்பனார் "திருப்பாவை" படிக்கும் பலனை உணர்ந்திருந்தார் என்று வேணு எண்ணும்போது அவரை-ஒரு தேவபுருஷராகவே கருதினான்.

அவன் தாயாருக்கு இன்னும் ஆண்டாள் ஞாபகம் மறக்கவில்லை! ஆனால் ஒரு சந்தேகம். தன் குடும்பம் இவ்வளவு தாழ்ந்து போனதுக்குப் பிறகு தன் மகனுக்கு ஆண்டாளைக் கொடுப்பார்களா என்ற சந்தேகம் தான்!

மாடசாமி பிள்ளை வந்து மன்றாடி விட்டுப் போகும்போது அவன் தாயார் நல்லவேளையாக வீட்டில் இல்லை. அவனிடம் வேணுவும் அவர் வந்ததைச் சொல்லவில்லை.

பணத்தைக்கொண்டு படிப்பதா அல்லது உத்தியோகம் தேடுவதா என்று யோசித்தான். ஆனால், சடகோப ஐயங்கார் தனக்கு அந்தப் பணத்

தைப் படிப்புச் செலவுக்குத்தான் கொடுத்தாரே யொழிய உத்தியோகம் சம்பாதிப்பதற்கு அல்ல என்று நினைத்ததும் மறுநாளே சென்னைக்குக் கிளம்பத் தீர்மானித்தான். என்ன அதிர்ஷ்டம்!

## 7

சென்னையில் கல்லூரி ஹாஸ்டல் வாழ்க்கை. கையில் பணம் இருக்கிறது. இதோடு மனம் விரும்பும் வாழ்க்கைத் துணைகளைத் தேடும் பருவம்; இடமுங் கூட! ஆண்களும் பெண்களும் சரிநிகர் சமானமாகக் கல்வி பயிலும் ஓரிடத்தில் சந்தோஷ வாழ்க்கையைத் தேவைப்படுத்திய இயற்கை குறிப்பிட்ட பருவத்தில், வேணுவின் உள்ளத்தில் சாரதா இடங் கொண்டது ஆச்சரியமல்ல. "ஈருடல் ஓருயிர்" என்ற பழமொழி பிறந்து பல வருஷங்களாகின்றன. ஆனால் அதற்குத் தகுந்த உதாரணம் கிடைத்தது இப்பொழுதுதான். அவ்வளவு அத்தியந்தக் காதல் ஒரே காரில் உலாவி வரவும்,—கார் சாரதாவுக்குச் சொந்தமானது—நகரத்து நாகரிக சந்தடியில் பங்கெடுத்துக் கொள்ளவும், தோழர்களின் கூட்டங்கள் விருந்துகள் முதலியவற்றிற்கு விஜயம் செய்யவும் இருவரும் தவறவில்லை. ஒருவருக்கு ஒருவர் மாசற்ற உள்ளத்தோடு நேசித்தார்கள். வாழ்க்கை இன்பத்தின் உச்சநிலை!

இப்பொழுது வேணு எவ்வளவோ திருந்தி விட்டான். முன்னைப் போல் பட்டுடைகள் உடுப்பதும் கிடையாது. கதருடைகள் தான் கட்டுவது. எந்நேரமும் தேசத்தியாகிகள் சரித்திரம், சரித்திர சம்பந்தமான நவீனங்கள் முதலியவற்றைப் படிப்பது, சாரதாவோடு தேசபக்தியின் வெறியோடு மணிக்கணக்கில் பேசுவது, கிராமப் புனருத்தாரணத்தை வற்புறுத்துவது என்றெல்லாம் ஆய்விட்டான்.

இரண்டு வருஷங்கள் வெகு சீக்கிரம் ஓடின. இரண்டாவது வருஷக் கடைசியில் ஒரு விஷயம். தேசபக்தி காதலைக்கூட பொருட்படுத்தவில்லை.

வேணு ஒருநாள் சாரதாவின் செலவில் ஒரு விருந்து நடத்தினான். சில பிரமுகர்களும், தோழர்களும், பல தேச பக்தர்களும் வந்திருந்தார்கள். கரகோஷங்களுக்கிடையே வேணு அவர்களை வரவேற்றுப் பேசினான். வழக்கம் போலவே ஆவேசத்தைக் கொட்டினான்.

"தோழர்களே! உலகத்தின் பற்பல மாறுதல்களுக் கிடையில் நாம் வாழ்க்கை நடத்துகிறோம்........தேசம் தன் சேவைக்கு அதன் தவப்புதல்வர்களை அழைக்கிறது......பொன் விளையும் நம் நாட்டுமக்கள் ஏன் கடும் வெயிலில் ரத்தத்தைப் பிழிந்து யந்திரமாக உழைக்கவேண்டும்? எங்கே பார்த்தாலும் வேலையில்லாத் திண்டாட்டம்.........இந்த மானபங்கத்தை நாம் சகித்துக் கொண்டிருப்பதா? (கரகோஷம்)......என்னை நீங்கள் தோழன் என்று மதித்திருந்தால் நீங்கள் செய்யும் தேச சேவைதான் எனக்குப் பரிசு!.........எங்கள் அழைப்பிற்கு இணங்கி இங்கு விஜயம் செய்த என் தோழர்களுக்கு வந்தனத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன்."

கரகோஷத்தோடு கூட்டம் கலையும்போது பாரதியின் "ஜயமுண்டு பயமில்லை மனமே" என்ற பாட்டை சாரதா இனிமையாகப் பாடினாள்.

பரீக்ஷைக்கு ஒரு மாதம் இருக்கிறது. 'தெய்வீக'க் காதலுக்கும் முடிவு வரும் என்று எவரும் கனவில் கூட கண்டதில்லை.

சாரதா ஒரு பணக்கார வீட்டுப்பெண். அவள் தகப்பனார் நல்ல சம்பாத்தியமுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர். மகள் எவ்வளவு பெரிய தேச சேவிகையாக இருந்தபோதிலும், தகப்பனாரின் ராஜ விஸ்வாஸத்துக்கு அடங்கி யிருக்கவேண்டி யிருந்தது. அதிலும் அவள் பெண்!

## 8

சூரியனுடைய ஒளியும் உக்கிரமும் குறைந்து வரும் நேரம். கடல் நீரை உண்டு, மென்மலரை வாட்டும் அவன் ஆளுகைக்கு ஒரு தற்காலிகமான முடிவைக் கட்டினான் காலதேவன்.

நிலையற்ற உலக வாழ்வை வெறுக்கும் வேதாந்திகள் கண்களை மூடி பகவத் தியானத்தில் மூழ்கி விடுகிறமாதிரி, ராமானுஜ புரத்துக் குளத்தி லுள்ள தாமரை மலர்கள் இதழ்களைக் குவித்தன.

பொதுவாக எல்லோரும் எல்லாமும் ஓய்ந்து ஒடுங்கும் மாலைநேரம், அப்பொழுது, மனதில் தீவிரவாதம், சமதர்மம் முதலியவற்றைத் தாங்கி மாலை இருளில் ஸ்டேஷனிலிருந்து ஊரை நோக்கி வரும் உருவத்திற்கும் பழைய காட்சிகள் யாவும் நேருக்கு மாறாகத் தென்பட்டன. நின்று நின்று அர்த்த மில்லாமல் யோசிப்பது, நடப்பது, மெல்லிய குரலில் மனத்தினுள் ளேயே போர் வீரர்களைப்போல் சபத மிட்டுக்கொள்வது இப்படியாக சேஷ்டைகள் செய்துகொண்டு வருகிறது.

பி. ஏ. பரீட்சைக்கு ஒருமாதம் இருக்கும்போதே "அரசியல் பயங்கர வாதி"யாகக் கருதப்பட்டு ஆறுமாத சிறைத் தண்டனை அனுபவித்ததற்கு அப்புறம், சொந்த ஊருக்கு வந்து கொண்டிருந்தான் வேணு.

வேணு சிறையிலிருக்கும் போதே தன் தாயார் இறந்துபோனதாகத் தகவல் கிடைத்தது. அதனால் தன் வீடு, நன்செய் முதலியவற்றின் கதியைப்பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது. அப்பொழுது தன் ஊரை நோக்கி திரும்பி வரும் பொழுதுங் கூட தன் எதிர்காலத்தைப்பற்றிய சிந்தனை ஒன்று மில்லாமல்தான் வந்தான். இருளின் மறைவிலேயே, தன் வீட்டில் முன்னால் வேலை செய்துகொண்டிருந்த ஷண்முகத்தின் வீட்டுக்குப் போனான். தனக்கு வீடு ஒன்று இருக்கிறது என்று என்ன உறுதி?

வேணுவும் ஷண்முகமும் வெகுநேரம் வரை பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியாக வேணுவின் வீட்டுத் திறவுகோலை வாங்கிக்கொண்டு வர ஷண்முகம் சடகோப ஐயங்கார் வீட்டுக்குப் போனான். அங்கே போய் வேணு வந்ததாகத் தெரிவித்ததும் அவனைக் கூப்பிடவிட்டார் ஐயங்கார். வேணுவும் அவரும் பல விஷயங்களைப் பேசினார்கள். திறவுகோலையும், ஒரு விளக்கையும் கொடுத்தார்.

அன்று இரவு கழிந்தது. மறுநாள் பகலும் இரவும் கழிந்தன. அதற்கு மறுநாளும் வந்தது. கழிந்துபோன அந்த ஒருநாளில் சடகோப ஐயங்காருக்கு எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்தன.

காலையில், ஒரு புஸ்தகத்தை விரித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் வேணு. அன்று சாயங்காலந்தான் தன் எதிர்கால வாழ்க்கைத் திட்டத்தை

தயாரிப்பது என்று தீர்மானித்துக் கொண்டான். அவன் தன் பார்வையை வேண்டுமென்றே புஸ்தகத்தில் செலுத்திக்கொள்ள வேண்டியிருந்தது. அவனுடைய ஏகாந்தத்தை இருவர் கலைத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆண்டாளும், அவளுடைய ஐந்து வயதுத் தம்பியுமே. முன்னால், தமயந்தி தன் குழந்தைகளை சமையல் தொழில் செய்துகொண்டிருந்த நளனிடம் அனுப்பி அவன் முகக்குறிப்பை அறிய முயன்றதுமாதிரி, வேணுவிடம் தம் குழந்தைகளை அனுப்பி வைத்தார் சடகோப ஐயங்கார். ஊரார் கண்களுக்கு வேணுவும் தானும் தனிமையாக இல்லை, தன் தம்பியும் கூட இருக்கிறான் என்று நிரூபிக்கவே ஆண்டாள் அந்தச் சிறு பையனோடு வேணுவின் வீட்டிற்குப் போனது. அவர்களைப் பார்க்கக்கூட வேணுவுக்குச் சகிக்கவில்லை. அதனால்தான் புஸ்தகத்தை விரித்து வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்பொழுது தபால்காரன் வேணுவின் விலாசமிட்ட ஒரு கடிதத்தை அவன் கையில் கொண்டுவந்து கொடுத்தான். அவன் அதை உடைத்துப் பார்க்கும்போது அவ்விருவரும் அவனை நெருங்கி வந்தார்கள். அவனுக்கு மூச்சு திணறிக் கொண்டிருந்தது. கடிதம் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்ததால் சத்தம் போட்டே வாசித்தான். கடிதத்தை வாசிக்க வாசிக்க அவனுக்கு வெறி கிளம்பிக் கொண்டிருந்தது. உரக்க வாசித்துக்கொண்டே போனான் வெறி பிடித்தவன் மாதிரி. அதன் அர்த்தம் ஆண்டாளுக்குப் புரியவேயில்லை. கடிதத்தை வாசித்து முடிக்கையில் அதில் எழுதப்பட்டிருந்த சாரதா என்ற பெயரை மாறி மாறி உச்சரித்துக் கொண்டிருந்தான். அதனால் ஆண்டாள் தன் தம்பியை அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போய் தகப்பனாரிடம் கடிதம் வந்ததையும், அவன் "சாரதா சாரதா" என்று புலம்பியதையும் கூறினாள். அவ்வளவுதான். "சரி சரி, பயலுக்கு மனசு எங்கேயோ மாட்டிக்கொண்டது. முன்னாடியே எவளையோ தனக்குத் தீர்மானம் பண்ணிக் கொண்டானோ முடித்துக்கொண்டானோ?...... .........ம்ம்" என்று சொல்லி விட்டுத் தம் ஆலோசனை அறைக்குள் புகுந்தார். மாடசாமி பிள்ளை அங்கே கணக்கு எழுதிக் கொண்டிருந்தார். ஒருவருக்கு ஒருவர் பரஸ்பரம் அபிப்பிராயங்களைப் பரிமாறிக் கொண்டார்கள் ஒரு முடிவுக்கும் வந்தார்கள். சிறிது நேரத்தில் வேணு அழைக்கப்பட்டான். அவனோடு நீண்ட நேர வாதாட்டம்! கடைசியில் ஒரு கேள்வியைப் போட்டார் ஐயங்கார்.

"நீ ஆண்டாளைக் கட்டிக்கொண்டு சுகமாகக் காலத்தைக் கழிக்கப் பிரியமா? இல்லாவிட்டால் வீட்டை விட்டு உடனே வெளியேறுகிறாயா? இரண்டில் ஒன்றைச் சொல்."

ஆண்டாளைக் கல்யாணம் செய்துகொள்ள ஒரேயடியாய் மறுத்து விட்டான். மறுநாள் காலையில் வீட்டைவிட்டுப் புறப்படுவதாகவும் சொன்னான்.

அன்று மாலை. அந்த இளம் வயதிற்குள்ளாகவே, வெறு குறுகிய கால உலக வாழ்க்கையில், எல்லாவற்றையும் வேணு இழந்து விட்டான். பெற்றோர்கள், ஐவேஜிகள், காதல் இன்பம், கடைசியில் அந்த பி. ஏ. பட்டமும்தான். மனிதன் காலத்தின் பற்பல சுழல்காற்றுகளுக்கெல்லாம் திருப்பிக் கொடுத்துக்கொண்டே வந்து இப்படிப்பட்ட மரத்துப்போன நிலை

மைக்கு வந்து சேரவேண்டி யிருக்கிறது. இனி வாழ்க்கையில் ஒரே சலிப்பு. நம்பிக்கை ஏது?

தான் இன்னொருவனை மணக்கப் போவதாக, பெற்றோரின் வற்புறுத்தலைக் காரணங் காட்டி கூசாமல் எழுதி விட்டாள் சாரதா. மனிதனுக்கு ஆதாரமளிக்கும் உறவின் உரிமையும் சிநேகத்தின் அன்பும் ஒன்று கூடும் காதலை இழந்தபின் வாழ்க்கையில் நம்பிக்கை வைக்க முயல்வது வீண் பிரயத்தனம் அல்லவா? உலகத்தினால் புறக்கணிக்கப் பட்டவனாய், சமூகத்தில் தன் பங்காளித்துவத்தை இழந்திருக்கிறான் வேணு. பார்க்கும் பொருள்கள் யாவும் வெறுப்பின் வடிவங்களாக இருந்தன.

சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டு சுவரில் மாட்டியிருந்த படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய அப்பொழுதிருந்த மனப்பண்புக்கு அவை பலியாக வேண்டி யிருந்தன. வெறிபிடித்துப்போயிருந்தான்.

ஒரு படம்: கிருஷ்ணன் கோபிகைகளோடு பிருந்தாவனத்தில் விளையாடிக் கொண்டிருக்கிற மாதிரி எழுதி இருந்தது. காதலை இழந்த அவனுக்கு அந்தப் படம் என்ன வெல்லாமோ செய்தது. கடைசியில்

"நீ தெய்வம்; உனக்கு எதற்கடா இந்த மதன விளையாட்டுகள்?" என்று சொல்லிவிட்டு அப்படத்தைப் பிடுங்கி எறிந்தான். படம் சொறுங்கின மாத்திரத்தில் அவன் மனம் திருப்தி கொள்ளவில்லை. படம் வரையப் பட்ட அட்டையையும் 'தும்புதும்'பாகக் கிழித்து எறிந்தான்.

அந்தப் படம், அந்த வீட்டில் எத்தனை பிரார்த்தனைகள், எத்தனை பாப மன்னிப்பு வேண்டுகோள்கள், துயரத்திலிருந்து விடுபட்டு சாந்தி பிறப்பதற்கு வெளியிட்ட முறையீடுகள், நிபாராதனைகள் முதலியவற்றை ஏற்றிருக்கும்! அது தன்னுடைய துயரத்தை யாரிடம் சொல்லி அழுமோ?

அடுத்த திருஷ்டி............

மற்றொரு படம்:—தூரத்தில், காட்டிலே சீதையோடு ராமன் நின்று கொண்டிருக்கிறான். ஏதோ பேசிக் கொண்டிருக்கிற பாவனையில் தோன்றுகிறார்கள். அவர்களை செடிகொடிகள இலேசாக மறைத்துக் கொண்டிருக்கின்றன. பக்கத்தில, லக்ஷ்மணன், சூர்ப்பநகையை அங்க ஹீனப்படுத்தி விட்டதால் அவள் கொள்ளும் சீற்றமும் ஆவேசமும் அவமானமும் அவளுடைய முகத்தில் பிரதிபலிக்கின்றன.

"ராக்ஷஸி யென்றால் ஒரு மரத்தில் கட்டிப்போட்டு விடுவது? நியாயத்திற்கு மாறானாலும் காதலை வேண்டியதற்கு இந்த தண்டனையா? அப்படியானால் துரோகம் செய்தவர்களுக்கு............? லக்ஷ்மணன், ஒரு வீரன்!" என்று இரைந்து சொல்லிக்கொண்டே அந்தப் படத்தையும் பிடுங்கினான். சிறிது நேரத்தில் அந்தப் படத்தின் காச சின்னங்களும் முந்திய படத்தின் சில்லுகளோடு கலந்தன.

அன்றிரவில்...............

விளக்கேற்றி விட்டு படுக்கையில் சாய்ந்தான். கதவை நன்றாகப் பூட்டி விட்டான். இரவு சாப்பாடு கிடையாது. மனதில் போராடும் எண்ணற்ற போராட்டங்களின் கலவரத்தில் தூக்கம் எங்கிருந்து வரும்? ஒரு

வகையிலும் சாந்தி பிறக்கவில்லை. சடகோப ஐயங்காரின் வஞ்சனை அவன் மனத்தை அறுத்துக் கொண்டிருந்தது. மறுநாள் காலையில் செய்ய வேண்டியது என்ன? பொழுது மறையும் மட்டும் நடந்துகொண்டே யிருப்பது. பாதை போகிற போக்கில் போய், காலம் நிறுத்தும் இடத்தில் தங்க வேண்டியது. ஒரு இலட்சியமும் கிடையாது.

பழைய நாட்கள் ஒவ்வொன்றாக அவன் ஞாபகத்திற்கு வந்துகொண்டே இருந்தன. ஒரு சமயத்தில் தான் மேல் படிப்புக்குச் செல்லும்போது, கொண்டிருந்த நோக்கம், கல்லூரி வாழ்க்கையில் பின்பற்றத் துணிந்த லட்சியங்கள், ஊரோடு அவன் செல்வப்பிள்ளையாகக் கருதப்பட்டது,......, இப்பொழுது இரவில் பட்டினியோடு கிடக்கிறான். 'ஏன்?' என்று கேட்பார் இல்லை. வேணுவுக்கு இதனால் வருத்தம் ஒன்றும் கிடையாது. உலகத்தில், சமூகத்தில் ஏற்படும் மாறுதல்களின் தாக்குதலுக்கு இலக்காகும் பல பேரிடை அவனும் ஒருவன், அவனுடைய வாழ்க்கையில் ஒரே முடிவைத்தான் கண்டான். அதுதான், "மானம், மரியாதை, உறவு, அன்பு எல்லாம் ஒரு குறிப்பிட்ட நிபந்தனையின் கீழ் இயங்குகின்றன. பணத்தின் சக்தி முன் அத்தன்மைகள் எல்லாம் அடிமையாகி சுய உணர்ச்சியை இழக்கின்றன. அப்படி உணர்ச்சி யற்றவர்கள் நிறைந்ததே இன்றைய சமூகம்" என்பது.

வெகுநேரம் கழித்துத் தூங்கி விட்டான். மறுநாள் காலையில் அனுப்போடு அவன் எழுந்திருக்கும்போது சடகோப ஐயங்கார் வீட்டிலிருந்து,

"கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா, உன் தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறுஞ் சம்மானம்
நாடும் புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாம் அணிவோம்;
ஆடையுடுப்போம்; அதன்பின்னே பாற்சோறு
மூட நெய்பெய்து, முழங்கை வழிவாரக்
கூடி இருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்."

என்ற பாடல் பாடுவது கேட்டது.

"நெய் யொழுக உண்டு, பொன்னணிகளையும் பட்டுடைகளையும் தரியுங்கள். அது உங்கள் அதிர்ஷ்டம், அண்டை வீட்டுக்காரன் பட்டினி கிடக்கவேண்டும் என்பது அவன் வாழ்வினைப்பயன்" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்.

ஒன்றிரண்டு சாமான்களைப் பெட்டியில் எடுத்து வைத்துக்கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பினான்.

உலகத்தில், வாழ்க்கை நாடகம் நடிக்கப்படும் அரங்குகளில் ஒன்றாயிருந்த அந்த வீடு, அன்று முதல் வேறொரு கதையை வேறு சில 'நடிகர்கள்' நடிப்பதற்கு உபயோகப்படுத்தப்பட்டது. அந்த நாடகத்தை நடத்தும் சூத்திரதாரர்கள் நிறைந்த சமூகத்தில் மனிதன் மிதந்து தத்தளிக்கிறான். அந்த சமூகத்தின் அழிவைத்தான் கனவு காண்கிறான் வேணு.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



இவ்விதம் 'சுக்ர' அண்டத்தையும்–அதன் காட்சியையும் பொருள் எல்லையின் வெற்றி அதிசயங்களுக் குரியனவென்று மேலை நாட்டின் பண்டைய மக்கள் கண்டிருந்தனர். இந்த உண்மைகள் பலவும் வீணான நம்பிக்கைக ளல்லவென்று விஞ்ஞானிகளும் தங்கள் ஆராய்ச்சிகளின் மூலம் வெகுவாக நிரூபணஞ் செய்திருக்கின்றனர். வானநூல் வல்லுநர் பலரும் தங்கள் ஆய்வுகளிலிருந்து அவ்வப்பொழுது தந்துள்ள விவரங்கள் தாம் அவர்களுடைய நிரூபணத்திற்கு உதவியா யிருந்த ஆதாரங்களாகும். அவர்கள் வானத்து ஊரும் அண்டங்கள் பலவற்றையும் உரிய சாதனங்களினால் நன்கு ஆய்ந்து, நிலவுலகின் பலன்களுக்குரிய முக்கிய அண்டங்களைப்பற்றி மட்டும் அதிகமாகப் பதிவு செய்திருக்கின்றனர். இவற்றுள், முன்னைப்பொழுது கிழக்கிலுள்ள மேதைகளிலும்-பின்னைப்பொழுது மேற்கிலுள்ளவர் தருவன விஞ்ஞானத்துறையின் நியதிகளில் வரும் தக்க விளக்கங்க ளாகும். இவை பெரும்பாலும் நம் முந்தையோர் பொறித்துள்ள பேருண்மைகளை உறுதிப் படுத்துகின்றன வென்னல் மிகையில்லை.

## எடையும்—இறுக்கமும்

பரிமாணத்தில் சுக்ரன் பூமியை ஒத்ததாக-ஆனால், சற்று சிறியதாக விருப்பது போன்றே எடையிலும் சற்று பூமியினும் குறைந்ததாகும். அதாவது அதன் பரிமாண அளவிற்கேற்ற எடை கொண்டிருக்கிறது சுக்ர அண்டம் என்னலாம். உதாரணமாக, பூமியின் சரக்கில் இரண்டரைப்படி—அதாவது ஒரு காலன் (gallon) எடுத்து நிறுத்த லளவையிற் கணக்கிட அது ஐம்பத்து ஐந்து பவுண்டு நிறையிருப்பின், சுக்ரனில் அதே அளவு (முகத்த லளவையால்) சரக்கை எடுத்து நிறுத்தலளவையில் கணக்கிட அது ஐம்பத்து இரண்டு பவுண்டு இருக்கிறதெனக் கண்டிருக்கின்றனர்.—'பளுவு'-'கனம்' என்பதெல்லாம் கோள்களுக்குரிய ஈர்க்கும் சக்திதான். கோள்களின் பரிமாணம்-திரட்சி-கனம் இவற்றால் அவற்றின் ஆற்றல் அறியத் தக்கது. அவ் ஆற்றல் அவ்வவற்றின் இறுக்கத்தைப் புலனாக்கும். இவ்வழி ஆய்ந்தவர்கள் வெள்ளி பூமியை ஒத்த-ஆனால், சற்று குறைந்த கனமுடையதென்கின்றனர். அதாவது பதினைந்து சதமானமே குறைந்ததாம். உதாரணமாக, நூற்றுஐம்பது பவுண்டு கனமுடைய மனிதர் ஒருவர் 'வெள்ளி' உலகில் நூற்று இருபத்து ஏழு பவுண்டு கனமுடையவராக விருப்பாராம்.

சுக்ரன் தன் பரிமாணத்திற்கும்-திரட்சிக்கு மேற்ப தன்னைத்தான் சுற்றிக்கொள்ளும் கதி கொண்டிருக்கிறதா வென்று இன்னும் அறியக்கூட வில்லை. எனவே, அதற்கும்-இயல் ஒளி வீசும் சூர்ய கோளத்திற்கும் உள்ள சம்பந்தத்தில் நிகழக்கூடிய விசேஷங்களை-நிர்ணயமாகக் கொள்ள

முடியாது போயினும், பொருள் எல்லையில் வெற்றிகள் பலவற்றின் பொதி விற்கும் போதாதவாக வன், மூலமாக விருக்கும் அனுபவங்கொண்டு அப்புவின் கூறு (ஜலத்தின் கூறு) மிகுந்ததெனக் கருதுகின்றனர். இவ்வழி பொருள் எல்லையிலேயே தெய்வ எல்லையின் சீர்த்திகளை அதிசயிக்கத்தக்க விதம் வர்ஷிக்கச்செய்யும் பெற்றிக்குரியதாகத் திகழுவது சுக்ரப் பேருலகம்.

## சரக்குகள்

சுக்ரனில் மண்கூறு இருபத்து நான்கு பங்கும்—நீர்க்கூறு முப்பத்து ஆறுபங்கும்-தீ-காற்று இச்சக கூறுகள் ஏறக்குறைய சம அளவின் பங்குலும் ஆக சரக்குகளின் சேர்க்கைகளைக் கூறலாம். இவ்வித அளவில் ஐயபூதச் சேர்க்கையாக உருகொண்டு திகழும் சுக்ர அண்டம் இது மூன் கூறிய வியாழ அண்டத்தைப்போலவே அடர்த்தியான காற்று மண்டலத்தால் சூழப் பெற்றிருக்கிறது. இதன் பின் இரண்டு கூறுகளின் நிலைகளும் ஏறக்குறைய சமஅளவு கொண்ட சேர்க்கை யாதலால், அவற்றிற் பெரும் பகுதி அவ் அவற்றின் சுபாவமான நிலைகளின் தீக்ஷண்யத்தினின்றும் குறைந்து விடுகின்றது. இந்தக் குறைவை சமனப்படுத்தக் கூடாதவிதம் சூரியகோளம் தரும் ஒளி-வெப்பங்கள் சுக்ர அண்டத்தைச் சுற்றிய அடர்த்தியான காற்றுமண்டலத்தால் பெரிதும் தடுக்கப்பட்டு விடுகிறது. இதனால், அவற்றின் தீக்ஷண்யம் எழுபதுமுதல் எண்பது சதமானம வரை நீரின் தன்மைக்குக் குறைந்து விடுகின்றதாம். எனவே, சுக்ர அண்டம் ஜலாதிக்கம் மிகுந்தது என்கின்றனர்.

இதன் சரக்குகள் முழுவதும் காட்சி எல்லையின் விஸ்தாரங்களாகவே பெரிதும் அமைதலின், ஜீவநிலையிக சோபை அனைத்தும் பொருள் எல்லையின் பேறுகளுக்குரியதாய் விடுகின்றன. முன் சத்தும்—பின் சத்தும் அற்புதங்களின் நிகழ்ச்சிகளுக் கானவையாகும். அவற்றின் இயக்கங்களும்-இயல்களும் இதன் ஆட்சியுள் அடங்குவனவாய், ஸ்திதி பலத்து மிகவும் விசேஷம் கொண்டதாக மதிக்கப்பெறுவது 'வெள்ளி உலகம்.'

---

# வில்லியம் தாம்ஸன்

(டி. பி. நவநீதகிருஷ்ணன் எம். ஏ., அண்ணாமலை சர்வகலாசாலை.)

(சென்ற இதழின் தொடர்ச்சி.)



1854-ம் ஆண்டிலேயே, இவர் கம்பி வடங்களின் (Cables) தன்மைகளைப் பற்றி ஆராயத் தொடங்கினார். இவர் காலத்திலேயே மின்சாரசார்ந்த முறைகளில் தொலை இடங்களுக்குக் கம்பி வழியே செய்திகள் அனுப்பும் முறை கண்டு பிடிக்கப்பட்டது. கடல் கடந்து செல்லவேண்டிய இடங்களுக்கு செய்திகள் அனுப்புவதற்கென, கடல் மட்டத்தின் கீழும் அதனூடேயும் உறையிட்ட கம்பி வடங்கள் (Insulated Cables) அமைக்கப்பட்டன. ஆயினும் இவற்றின் வழியே செய்திகள் அனுப்பும்போது, அவை மிகவும் தயங்கிச் சென்றதனால், செய்திகள் செல்வதற்கான காலம் அதிகப்பட்டது. இவ்வாறு அவை காலந் தாழ்ந்து சென்றமைக்குக் காரணமான தடைகளைப்பற்றி அறியும் பொருட்டே தாம்ஸன் தம் ஆராய்ச்சிகளைத் தொடங்கினார். கம்பி வடங்களின் தன்மைகளைப்பற்றி மிக்க ஆர்வத்துடன் ஆராய்ந்து 'மின்சாரங் கொண்டு தொலைச் செய்தியனுப்பும் முறைகளைப்பற்றின விதியியலை (On the Theory of the Electric Telegraph)ப் பற்றிப் பல கட்டுரைகளை வெளியிட்டனர். அவற்றினில் கலப்பற்ற செம்பினாலாகிய கம்பிகளையும், பருமை மிக்க உறைகளையும், மட்டுமே பயன் படுத்துவதால், செய்திகள் தடையின்றிச் செல்லுமாறு செய்யலாம் என்று இவர் விளக்கினார். 1856-ம் ஆண்டில், அட்லாண்டிக் கடலினூடே (Atlantic Ocean) கம்பி வடத்தை அமைக்க, முந்நூறைம்பதாயிரம் பவுன் முதலுடன், ஒரு 'கூட்டு வணிகக்கழகம்' (Joint Stock Company) நிறுவப்பட்டது. தாம்ஸன் அதன் பொறுப்பாளிகளில் (Directors) ஒருவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். வடத்தை அமைக்கும் பணியில தாம்ஸன் ஈடுபடாதிருந்தும், அதைப்பற்றின ஆராய்ச்சிகளைத் தம் சோதனை மன்றத்தில் செய்தே வந்தனர். அவற்றின் விளைவுகளில் ஒன்று, இவர் கண்டுபிடித்த புதிய வகையான 'நுண் மின்னோட்ட அளவி' (Galvanometer) யாகும். வடத்தை அமைக்கும் பணியாற்ற, வைட்அவுஸ் (White house) எனும் பொறியாளர் (Engineer) தேர்ந்தெடுக்கப்பட்டார். வேலைத் தொடங்கு முன் அவர் பிணியுற்றாராதலின், தாம்ஸன் தாமே அப் பணியைச் செய்ய ஏற்றுக்கொண்டனர். இதற்கென, பிரிட்டிஷ் (British) அரசியலார், 'அகமெம்னன்' (Agamemnon) என்ற கப்பலையும், அமெரிக்க (American) அரசியலார், 'நயாக்ரா' (Niagara) என்ற கப்பலையும் உதவினர். தாம்ஸன் இவ்வாறு வடத்தை அமைத்துக் கொண்டே முன்னூற்று முப்பது கல் சென்றதும், வடம் அறுந்து கடலினுள் அமிழ்ந்தது. இவ்வாறு தடைப்பட்ட பணியை, ஓராண்டின் பின்னரே மீண்டும் தொடங்க இயன்றது. வைட்அவுஸ் இம்முறையும் தம் பணியையாற்ற மறுத்தனர். தாம்ஸனே மீண்டும் கப்பலேற வேண்டிய

தாயிற்று. புறப்பட்ட எட்டாம் நாள், பெரும் புயற்காற்றை அக் கப்பல் எதிர்க்க வேண்டியதாயிற்று. இவ்வாறான பல இடர்களையும் எதிர்த்துப் போராடி, இறுதியில் தாம்ஸன் வெற்றி யடைந்தார். 1858-ம் ஆண்டு ஆகஸ்ட் 5-ம் நாள், அமெரிக்கா அயர்லாந்து (Ireland)டன் பிணைக்கப்பட்டது. அந்நாளே, மாலை நான்குமணிக்கு ஐந்து நிமிடத்திற்கு முன், ஐரோப்பாவினின்று அமெரிக்காவிற்கு முதன் முதலான தந்திச் செய்தி யொன்றை தாம்ஸன் அனுப்பினார். ஐந்து நிமிடத்திற்குப் பின் அங்கிருந்து விடையையும் இவர் பெற்றார்.

வைட் அவுஸ், செய்திகள் போக்கு வரவு நிலையத்தில் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்; தம் பணியை யேற்றவுடன், தாம்ஸன் அமைத்த கருவிகளை அப்புறப் படுத்திவிட்டு, தான் கண்டுபிடித்த கருவிகளை அமைத்தனர். அமெரிக்காவில் தாம்ஸனின் கருவிகளே யிருந்து வந்தன. இம் மாறுதல் ஏற்பட்ட பின், செய்திகள் போக்குவரத்து தடைப்படலாயிற்று; அரசியார் அனுப்பிய செய்தி யொன்றை அமெரிக்காவிற்கு, எவ்வாறோ பதினேழு மணிகளுக்குப்பின் சேரும்படி வைட் அவுஸ் செய்தார். அங்கிருந்து விடை ஒரே மணிக்குப் பின் கிடைத்தது. வைட் அவுஸ் வேலையினின்று நீக்கப்பட்டார். தாம்ஸன் அவ் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஆயினும், அத்துடன் போராசிரியராயு மிருந்து வந்தனர்.

ஒரு திங்களுக்குப்பின் செய்திகள் போக்குவரத்து மறுமுறையும் தடைப்பட்டது. வடம் தூய செம்பினால் ஆக்கப்படாததே இதற்குக் காரணம் எனத் தாம்ஸன் விளக்கினார். ஆதலின் இவர் கூறிய வகையில் செம்மையான செம்பினாலாகிய கம்பிகள் கொண்ட வடம் செய்யப்பட்டு, திணியான உறைகளால் மூடப்பட்டது. 1865-ம் ஆண்டின் இறுதியில் இவ்வடம் அமைக்கப்பட்டது. இதன் பின் எவ்வகையான தடையுமின்றி, செய்திகள் பறக்கலாயின. இவரும் வீரத்திரு. வில்லியம் தாம்ஸன் (Sir-William Thomson) ஆனார். இவரது புகழ் உலகம் முழுதும் பரவிற்று.

புகழெய்திய பின்னும் தாம்ஸன் தம் செயல் முறையான ஆராய்ச்சிகளைத் தவறாது செய்து வந்தார். இவற்றின் விளைவாய்ப் பல புதிய கருவிகளைக் கண்டுபிடித்தார். அவற்றை யெல்லாம் தமக்கே 'உரிமை' (Patent) யாக்கிக்கொண்டார்.

இன்பமும் துன்பமும் அடுத்தடுத்துத் தோன்றும் இயல்பு வாய்ந்தன வன்றோ? தம் புகழோங்கி வந்த அக்காலத்தே, இவர் உறைபனி மீது பேருவகையுடன் ஓடியாடி விளையாடும்போது, கால் சறுக்கி விழுந்தனர். ஒடிந்த காலுடன் மருத்துவச்சாலைக்குத் தூக்கிச் செல்லப்பட்டார். சின்னாட்களில் நலமடைந்தா ராயினும், இவ் விடுக்கணின் நினைவு என்றும் மாறாதிருக்கும் வண்ணம், இதன்பின் ஒரு காலைச் சிறிது ஊன்றியே நடக்க வேண்டியதாயிற்று. உடல் நலம் குன்றிவந்த இவர் மனைவியாரும் 1870-ம் ஆண்டில் இறந்தனர். தாம்ஸன் இப் பிரிவாற்றாமையின் மிகவும் வாடினார்.

துன்பக் கடலிலாழ்ந்த தாம்ஸன் எவ்வாற்றானும் ஆறுதல் பெற எண்ணினார். 'லாலாருக்' (Lalla Rukh) என்ற அழகிய நாவா யொன்றை வாங்கி, அதில் கடல்வளம் காணச் சென்றார். தாம் கண்டுபிடித்த கருவிகளின் உரிமைகளினின்று மிக்கப் பொருள் பெற்றவராதலின், தம் துயர்

தீங்கப் பொருள் செலவிடுவதைப் பொருட்படுத்தவில்லை. இவர் நீலத் திரைக்கடலிலே நாவாய்க்கலையை (Navigation)ப் பயின்றார்; கடலின் ஆழத்தை அறியும் கருவியை (Sounding apparatus)க் கண்டுபிடித்தார்; திக்கறியும் கருவியை (Compass) நன்முறையில் மாற்றி யமைத்தார். கடலின் ஏற்ற வற்றங்களை (Tides)ப்பற்றின விதிகளைக் கண்டு பிடித்தார்; தம் உடன் பிறந்தோரான ஜேம்ஸ் கண்டுபிடித்த எண்ணும் கருவியை (Calculating machine)க்கொண்டு குறித்த இடத்தில் குறித்த நாளில் ஏற்றவற்றம் எவ்வாறிருக்கும் என முன்னரே கண்டறியும் வகையைக் காட்டினார். இவ்வாறு தாம் கண்டுபிடித்த கருவிகளை, இவர் தமக்கே 'உரிமை' யாக்கிக்கொண்டார். இவ் வுரிமைகளினின்று, பின்னர் பெரும் பொருளீட்டினார். இவ்வாறு இவர் நன்பம் நீர திரை கடலோடியும், மேலும் செல்வமே பெற்றார்.

பல நன் மின்சாரக்கருவிகளைக் கண்டுபிடித்த இவர் மின்சார அளவைகள் ஒழுங்குற அமைய வேண்டுமென எண்ணினது இயல்பேயாம். அவ்வாறு ஒழுங்கு படுத்துவதற்கென ஒரு சங்கம் நிறுவப்பட வேண்டும் எனத் தம் கருத்தை வெளியிட்டார்; சங்கமும் நிறுவப்பட்டது; ஆயினும் ஆறாண்டுகளுக்குப் பின்னரே, அச் சங்கத்தினர் மின்சார அளவைகளுக்கு அடிப்படையான அலகுகளை (Units) உறுதியாய் நிலைநாட்டினர்.

பொறியியற்றொழில் முறைகளின் (Industries) பெருக்கத்தால், அக்காலத்தே சமூக வாழ்க்கையில் பல மாறுதல்கள் தோன்றலாயின. பொறியியற்றொழிலுக்கேற்ற எண்ணியல் நூன்முறைகள் இன்றியமையாதவையாயின. இம் முறைகளை முதன் முதலாய்த் தோற்றுவித்தவர். தாம்ஸனே யாவார். இவரும் எடின்பரோ பல்கலைக்கழகப் பேராசிரியரான டேயிட் (Tait) என்பாரும் ஒன்று சேர்ந்து, விஞ்ஞானத்தைப்பற்றின விரிவான நூலொன்றை வெளியிட்டனர். அதில் இப் புதிய எண்ணியல் முறைகளைத் தெளிவாயும் விரிவாயும் இவர் விளக்கியுள்ளார். இந் நூலைப் பற்றி பேராசிரியர் மாக்ஸ்வெல் பின்வருமாறு எழுதியுள்ளார்.

"பேராசிரியர்களுக்கே உரித்தானதென்று எண்ணப்பட்ட எண்ணியல் முறைகளை, சிற்றறிவினரும் அறியும் வண்ணம் செய்த தாம்ஸனும் டேயிடும் நம் பாராட்டுக் குரித்தானவர். எண்ணியல் அறிஞரெனும் பண்டைக்காலத்து மாயவாதிகள் இணைபுத் தொடர்கள் (Equations) போன்ற அறிகுறிகள் எனும் மாய மொழிகளின் துணை கொண்டு தான் பெறலாம் எனக் காட்டின பொருள்களை யாவரும் அறியும் தாய் மொழியின் துணை கொண்டே பெறலாம் என இவ் வடநாட்டு மாயாவிகள் கருணையற்ற அஞ்சா நெஞ்சுடன் துணிந்துரைக்கின்றனர். ஆதலின் இப்பொழுது, நம்மில் பாமரரும் அம் மறைச் சொற்களின் பொருளை யுணர்ந்து விஞ்ஞானியக் கூட்டங்களில் கலந்து பேசும் ஆற்றலைப் பெறுகின்றனர்."

இங்ஙனம், தாம்ஸனும் டேயிடும் விஞ்ஞானீயக் கருத்துக்களைப் பலரும் அறியுமாறு செய்த பெரும் பணியை நிறைவேற்றினவராவர்.

1873-ம் ஆண்டில் தாம்ஸன் தென்னமெரிக்காவிலுள்ள மெடியரா (Madeira) தீவுக்கு வடத்தையமைக்கும் பணியாற்றச் சென்றார். அவ்வமயம், இவர், அத் தீவிலிருந்த பெருநிலக் கிழவர்களி லொருவரான

ப்ளாண்டி (Blandy) என்பாரையும், அவரது மகளையும் அறிய நேர்ந்தது. அடுத்த ஆண்டு மீண்டும் அங்கு சென்று ப்ளாண்டின் மகளை மணந்தார். இவ்வாறு இவர் மணந்த அம் மங்கையும் இவர் பால் மிக்க அன்புடனிருந்தது மன்றி தன் வீட்டுப் பணிகளையும் செவ்வனே யாற்றி வந்தனள். தாம்ஸனையும் நன்கு போற்றி வந்தனள்.

மறுமண மானதும், தாம்ஸன் லாங்க்ஸ் (Langs) என்ற சிற்றூரில் ஒரு பெரும் மாளிகையை அமைத்தார். அதில் தம் மனைவியுடன் இனிது வாழ்ந்து வந்தனர்.

1890-ம் ஆண்டில், இவர் அரச விஞ்ஞானச் சங்கத்தின் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இவர் அரசியலிலும் தலையிட்டனர். இதன் விளைவாய் கெல்வின் எனும் உயர் குடி மகனார் (Lord Kelvin) பதவியையும், பெருஞ் செயலாளர் வரிசையி லமர்ந்தோர் (Order of Merit) எனும் பட்டத்தையும் பெற்றார்.

1896-ம் ஆண்டில், இவர் க்ளாஸ்கோ பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் அணையிலமர்ந்து ஐம்பது ஆண்டுகள் ஆயினதை முன்னிட்டு, இவருடைய பொன் விழா சிறப்புடன் கொண்டாடப்பட்டது. உலகின் பல பாகங்களினின்று உயர்ந்த விஞ்ஞானிகள் பலர் திரண்டிருந்தனர். அங்கு குழுமிய மக்களின் தொகை ஈராயிரத்திற்கு மேலுமாகும். அப் பெருங் கூட்டத்தினர்க்கு, தாமாற்றிய சிறப்புரையில், கெல்வின் உயர்குடி மகனார் பின்வருமாறு கூறியுள்ளார்.

"சென்ற ஐம்பைத்தைந்து ஆண்டுகளாக விஞ்ஞான முன்னேற்றத்தின் பொருட்டு விடா முயற்சியுடன் நான் ஆற்றிய பணிகளின் விளைவைப்பற்றி ஒரே சொல்லில் கூறி விடலாம். அச் சொல் "தோல்வி" என்பதேயாம். காந்த—மின்சார வலிமையைப் பற்றியும் ஆகாசம் (Ether), மின்சாரம், பருப்பொருள் (Material Objects) இயைபுப் பொருத்தம் (Chemical affinity) இந் நான்கினிடையுமுள்ள உறவுகளைப் பற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நான் மாணவருக்கு விரிவுரைகள் நிகழ்த்தத் தொடங்கிய காலத்தில் அறிந்ததை விட அதிகமான தொன்றையும் இப்பொழுது நானறியேன். தோல்வி யடைந்தவர் துன்புறுதல் இயல்பேயாம். ஆயினும் விஞ்ஞானத் துறையிலீடுபடுபவர் தாமாற்றும் பணிகளில் ஆழ்ந்த கருத்தைச் செலுத்த வேண்டியவராதலின், தோல்வியுடன் தோன்றும் துன்பத்தை அவர்கள் முற்றும் பொருட்படுத்துவதில்லை. தாம் ஒவ்வொரு நாளும் இயற்றவேண்டிய பணிகளி லீடுபட்டுச் சிறிது இன்பத்தையும் பெறுகின்றனர்."

தாம்ஸன் தம் வாழ்க்கையின் பலனை முற்றும் எய்தவில்லை யென்பதைத் தாமே நன்கு உணர்ந்தவர் என்பதை இம் மேற்கோள் காட்டுகின்றது. இவ் வுணர்ச்சி இவரிடம் காணப்படுதலினாலேயே, இவரை யொரு பெருமகனைக் கருதலாம்.

தாம்ஸன் தம் ஆயுட்காலத்தினுள் அறுநூறு விஞ்ஞானியக் கட்டுரைகளை வெளியிட்டவர்; எழுபது புதிய கருவிகளின் உரிமையைப் பெற்றவர்; இருநூற்றைம்பது விஞ்ஞான அறிஞர் சங்கங்களால் பாராட்டப்பட்ட

வர்; பெரும் பொருளீட்டியவர்; அரசியலாரால் சிறப்பிக்கப்பட்டவர். இவ்வாறுனவர் தம் வாழ்க்கையை எடுத்துக்காட்டும் சொல் "தோல்வி" யென்ருர். "ஏன் இவ்வாறு கூறிஞர்?" என நாம் வினவலாம். அக் கூட்டத்திலிருந்த பலர் அவ்வாறு இவர் உரைத்ததற்குக் காரணம் அவை யடக்கமே யென்றெண்ணினர். நாம் அவ்வாறு எண்ணவில்லை. பருப்பொருள்களையே பெரிதெனப் பாராட்டுதலால், இறுதிக் காலத்தில் எவரும் அடையும் ஏமாற்றத்தையே இவரும் அடைந்து, உளங்கசிந்து அவ்வாறு கூறிஞர் என நாம் துணிகிருேம்.

பொன்விழாவிற்குப் பின் இவர் பேராசிரியராய் மூன்றுண்டுகளேயிருந்தனர். அதன் பின் இவர் ஓய்வு பெற எண்ணிஞர். ஆயினும் விஞ்ஞானியக் கூட்டங்களுக்குச் சென்று வந்தார் இறுதிவரை தம் மறிவு குன்ருதிருந்தார். 1907-ம் ஆண்டில் டிஸம்பர் 23-ம் நாள் கெல்வின் உயர்குடி மகஞர் இவ்வுலக வாழ்வை நீத்தனர். அவருடைய உடல் வெஸ்ட்மின்ஸ்டர் (Westminster) மடத்தில், விஞ்ஞானப் பேறிஞரில் முதல்வரெனக் கருதப்படும் நியூடன் (Newton) கல்லறைக்கடுத்த இடத்தில் புதைக்கப்பட்டது.

இவர் ஆற்றின் பணிகளில் தலையாயது, அட்லாண்டிக் கடலினூடே வடத்தை அமைத்து, இரு பெரும் நாடுகளை இணைத்ததே யெனலாம். செய்திப் போக்குவரத்து விரைந்து நடைபெறுவதால், நாடுகள் நெருங்கு கின்றன. இதனல் நாளடைவில் அவை ஒன்றுடனென்று கொண்டுள்ள நட்புரிமையும் விரைந்தோங்கி வளரும் எனக் கெல்வின் கருதிஞர். இப்பேருலகு உண்மையில் சிறுஉலகே எனக் காட்டிய பெருமை இவருக்கே உரித்தான தாகும். இரண்டாவதாக, இவர் கண்ட குட்டியக்கவியல் விதிகளைக் கூறலாம். இவையே இக் காலத்துப் பொறிகள் பலவற்றினுக்கும் அடிப்படையான விஞ்ஞானக் கருத்தைக் கொண்டவையாம். மூன்ருவதாக, இவர் கண்டுபிடித்த நுண்ணிய கருவிகளைக் கருதலாம். இக் கருவிகளே மின்சாரத்தையும், நாவாய்க்கலையையும் வளர்ந்தோங்கச் செய்தவை யெனலாம். இன்னும் இவராற்றிய பல ஆராய்ச்சிகளின் விளைவுகளைப்பற்றிக் கூருமல் விடுக்கிருேம்.

கெல்வின் உயர்குடி மகஞர் பேரறிவு படைத்தவர்; ஆயினும் பருப்பொருள் பாற்படும் அறிவுப்பகுதியை மட்டுமே தெளிவுறக் கண்டவர். அத்துறையில் இவரை ஒப்பாரிலர் எனலாம். புலன்களுக்கெட்டாப் பகுதியைப் பற்றி இவர் கருத்தூன்றியவ ரன்று. ஆதலின் அறிவின் ஆற்றலை முற்றும் அறியாது, 'பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை' யென்பதற்கோர் சான்ருய் உறைந்த உயர்தனி மகன் தாம்ஸனுவார்.



# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



**கருணா:**—அதிருக்கட்டும், அவன் பிறகு என்ன செய்தான்?

சீனு:—உடனே தானும் மணிபுரத்திற்குப் போவதாகக் கூறினான். அவன் பகல் 1½ மணி வண்டிக்குப் புறப்படப் போவதாகக் கூறினான்...... நான்தான் அவளை 1½ மணி வண்டியில் மணிபுரத்திற்கு ஏற்றி அனுப்பி விட்டேன். அவள் அங்கு 2 மணிக்கெல்லாம், வந்து சேர்ந்திருக்க வேண்டுமே!......நீங்கள் அவளைப்பற்றி இப்போது விசாரிப்பதைப் பார்த்தால், அவளை நீங்கள் அங்கே காணவில்லைபோ லிருக்கிறதே!

கருணா:—ஆம்! இங்கே அவள் இன்னும் வந்து சேரவில்லை. முக மூடியின் ஆட்கள் அரசகேசரியைப்பற்றியே இப்பொழுது விசாரித்துக் கொண்டிருப்பார்க ளாதலால், (காலைப் பத்திரிகையைப் படித்தபிறகு) அவர்கள் மனோன்மணி புறப்படுவதை யறிந்து அவளை எப்படியாவது தந்திரமாகப் பிடித்துச் சிறை செய்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்... .........நல்லது! இப்பொழுது நான் சொல்வதைக் கேள்! மனோன்மணி 'என் னிருப்பிடத்தை நீ கூறிவிட்டால்,—உன்னைத் துப்பாக்கிக்குண்டின் மூலம் கொலைசெய்து விடுவதாகப் பயமுறுத்தினான். ஆனால், இப்பொழுது, நான் சொல்வதைக்கேள்! மனோன்மணியை; நான் மீண்டும உயிருடன், (அங்கு திரும்பி வருவதற்குள்) பார்க்காவிட்டால், உன்னைச் சித்திரவதை செய்து கோல்வேன் என்பது உனக்கு ஞாபக மிருக்கட்டும்'' என்று கூறி, அதற்குமேல் யாதொன்றும் பேச விரும்பாமல் டெலிபோனை அதன் கொக்கியில் சடக்கென்று மாட்டினான் கருணாகரன்.

இப்பொழுது அவன் மனதிலிருந்த துணிகரமும் தைரியமும் எங்கோ! பறந்தோடி விட்டன. 'மனோன்மணி யாரிடம் அகப்பட்டுக் கொண்டு துன்பப்படுகிறாளோ,'' என்ற கிலி அவனை யதிகமாகப் பிடித்துக் கொண்டது.

'அரசகேசரி எப்பேர்ப்பட்ட திடுக்கிடத்தக்க காரியங்களைச் செய்தா லென்ன! அல்லது பிறருக்கு எப்படிப்பட்ட நன்மைகள் செய்தால்தா னென்ன! மனோன்மணி யில்லாமல் அவருக்கு காரியங்கள் இனிமேல் ஓடாது. மனோன்மணி யில்லாமல், அவருடைய வாழ்க்கை ரதம் கம்பீரமாகவும், இன்பகரமாகவும் நடக்க முடியாது'

என்றெல்லாம் கருணாகரன் எண்ணினான். 'அவள் அப்படிச் சிறைப் பட்டிருந்தால், நிச்சயமாக, முக மூடியினிடம் தான் அவள் சிறைப்பட்டிருக்க வேண்டுமென்ற' கருணாகரன் நிச்சயமாகத் தெரிந்து கொண்டான்.

அப்பொழுது கோபத்தினாலும், ஆத்திரத்தினாலும், அவன் உடல் சிறிது நடுங்கியது. 'கூடிய சீக்கிரம், புருஷோத்தமனைச் சந்தித்து, அவன்

மூலம், முகமூடியைச் சந்திக்கவேண்டும். முகமூடி யிருப்பில், மனேன் மணி இல்லாவிட்டால், அப்பொழுது............'

இப்படி நினைத்தபொழுது கருணாகரனின் பற்கள் கோபத்தினல், 'நர நர'வென்று நெறிந்தன. அவனது கைகளிரண்டும் முஷ்டி பிடித்த' வண்ணம் கொதித்தன.

நல்ல வேளையாக கருணாகரன் பக்கத்தில், இப்பொழுது சீனுவும்; முகமூடி மனிதனும் இல்லை; ஆனல் அப்படி யிருந்திருந்தால்!—அவர்களின் கதி யாதா யிருக்குமோ? யார் கண்டது!

சட சடவென்று மாடிப்படிகளின் வழியாய் ஏறித் தன் அறையை யடைந்து, சாளரத்தின் வழியாய் புருஷோத்தமனின் வரவை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தான் கருணாகரன்.

## 9-வது அத்தியாயம்

### வீரமார்த்தாண்டனும் முகமூடியும்

சுமார் 10 நிமிடங்கள் கழிந்தன. அப்பொழுது தெருக்கோடியில் புருஷோத்தமனின் கார் வருவது கருணாகரனுக்குத் தெரிந்தது உடனே சட சடவென்று கீழே இறங்கிப்போய் 'பாலகா விலாசின்' வாயிற் புறத் தண்டை நின்ருன். காரும் உடனே வந்தது. அதிலிருந்து புருஷோத்தமன் பரபரப்புடன் இறங்கினன்.

கருணாகரன் அவன் அருகில் சென்று, அவனை யழைத்துக்கொண்டு மீண்டும் தன் அறைக்குத் திரும்பினன். மேலே தன் அறையை யடைந்ததும், உட்பக்கம் போய்க் கதவைத் தாளிட்டு, புருஷோத்தமனைப் பார்த்து, "என்ன, விசேஷம்; காயா, பழமா?' என்று கேட்டான்.

புருஷோ:—பழமே. முகமூடி மனிதனின் பரபரப்பிலிருந்து அவன் வீரமார்த்தாண்டனைக் காண வெகு ஆவலுடன் இருக்கிருனென்று தெரிகிறது. ஏனெனில் நான் விஷயத்தை எடுத்துரைத்தவுடனேயே, "சரி," என்று ஒப்புக்கொண்டான். இனி, நாம் புறப்பட வேண்டியதுதான். ஆனல் எக் காரணத்தைக் கொண்டும் போலீஸ் உதவியையே நாடக் கூடாது. அப்படி ஏதாவது நடந்தால் முகமூடியினிடம் சிக்கி யிருக்கும் அவ்வளவு உயிர்களுக்கும் சேத மேற்பட்டு விடுமென்று நினைக்கிறேன்..."

கருணை:—என்ன! முகமூடியினிடம், உயிர்கள் சிக்கி யிருக்கின்றனவா?

புருஷோ:—ஆம்! அதாவது தற்கொலைகள் செய்து கொண்டிருப்பவர்களின் மனைவிமார்களெல்லாம் இப்பொழுது முகமூடியின் வசத்திலேயே சிறைப்பட்டிருக்கிருர்கள்......தவிர, நான் ஒரு விஷயம் சொல்ல மறந்தே போய்விட்டேன். நான் அங்குபோய் முகமூடியினிடம் வீரமார்த்தாண்டனைப் பற்றிய ஒப்பந்தத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் ஒரு அதிசயமான விஷயம் நடந்தது. நான் வீரமார்த்தாண்டனின் பெயரைச் சொன்னவுடனேயே பக்கத் தறையிலிருந்து ஒரு பெண்ணின் விபரீதமான ஓசை யெழுந்தது—அவள், எனக்கும், முகமூடி மனிதனுக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்!—

ஏனெனில், அவள், "பயப்படாதீர்கள்! சகோதரிகளே! நாம் இங்கிருந்து விடுபடும் காலம் வந்துவிட்டது. வீரமார்த்தாண்டன் இங்கே வரப்போகிறான். அப்பொழுது நிச்சயமாக நாம் இங்கிருந்து விடுபடலாம்," என்று கம்பீரமாகவும், மகிழ்ச்சியுடனும் கூக்குரலிட்டாள்.

அவள் மேற்படி கூக்குரலிட்டு அடங்கியபிறகு, முகமூடி என்னைப் பார்த்து, "புருஷோத்தமா! இங்கு வீரமார்த்தாண்டன் வரட்டும். நீ மட்டும் வீரமார்த்தாண்டனை இங்கே உயிருடன்—ஆனால், நிராயுதபாணியாக வரும்படி—அழைத்துவா! ஏனெனில் வீரமார்த்தாண்டனின் கரங்களில் துப்பாக்கிகள் தலைகினால் அப்பொழுது அவனை எதிர்க்க யாராலும் முடியாது! ஆகையால் நீ நான் சொன்னபடி யழைத்து வந்தால், நீ என்ன சொன்னாலும் கேட்கத் தயாரா யிருப்பேன். எனக்கு அந்த விஷயத்தில் வீரமார்த்தாண்டனின் சத்தியம் கூடத் தேவையில்லை. ஏனெனில் வீரமார்த்தாண்டன் சொன்ன சொல் தவறாதவன் என்பது எனக்குத் தெரியும்" என்று சொல்லி யனுப்பினான்."

என்று முடித்தான். கருணாகானுக்குத் திடீரென்று இரத்தம் குளிர்ந்ததுபோன்ற உணர்ச்சி யேற்பட்டது. அவனுக்கு இப்பொழுது, 'நிச்சயமாக மனோன்மணி முகமூடியிடம் தான் சிக்கி யிருக்கிறாள்' என்று தெரிந்தது.

'அப்படியானால்—திடீரென்று, அங்கே கூக்குரலிட்ட பெண்தான், மனோன்மணியாக இருக்கவேண்டும். ஏனெனில் மனோன்மணிக்கு மட்டும் தான் வீரமார்த்தாண்டனின் வேலைத் திறமெல்லாம் தெரியும். அவன் வீரமார்த்தாண்டன்) முகமூடியினிடம் வருவதாயிருந்தால்—நேருக்கு நேர் சந்திப்பதாக விருந்தால்—முன் யோசனையில்லாமல் வரமாட்டான் என்பதுவும்-மனோன்மணிக்கு மட்டுமே தெரியும்' என்றெல்லாம் கருணாகரன் எண்ணினான். பிறகு உடனே அவன் எழுந்து புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானான். தன் கைப்பெட்டியில் இருந்ததொரு சிறிய பெட்டியை யெடுத்து, அதைத் திறந்து, அதிலிருந்து ஒரு வஸ்துவை எடுத்தான். அது ஒரு ஒரு சிகரெட்மாதிரி யிருந்தது. ஆனால் அதைக் கருணாகரன் கையாடியமாதிரியிலிருந்து அது ஏதோ ஒரு அபாயகரமான வஸ்துவாக இருக்க வேண்டுமென்று தெரிந்தது. அந்த வஸ்துவை யெடுத்த கருணாகரன்,-மேஜையின் மீது இருந்த மற்றொரு பெட்டியிலிருந்து மூன்று சாதாரண சிகரெட்டுக்களை யெடுத்து—அவைகளுடன் இந்தச் சிகரெட்டையும் சேர்த்து தன் மார்புப் பக்கத்து சட்டையில் வைத்துக்கொண்டான். அது பார்ப்பதற்கு பையில் நான்கு சிகரெட்டுகள் மட்டும் இருப்பதாகத் தோன்றியது. பிறகு தன் கைப்பெட்டியிலிருந்து, கருப்பு அங்கி யொன்றையும், முகமூடி யொன்றையும் எடுத்துக்கொண்டு அதை ஒரு சிறிய மூட்டை போல சுருட்டிக்கொண்டான். பிறகு காலியாயிருந்த தன் கைத் துப்பாக்கிகளில் மறுபடியும் குண்டுகளைப் போட்டுக் கெட்டித்து, வைத்துக்கொண்டான். பிறகு புருஷோத்தமனின் பக்கம் திரும்பி, "உம், போகலாம்," என்றான்.

அது வரையில் கருணாகரனின் செய்கைகளை ஆச்சரியத்துடன் கவனித்துக் கொண்டிருந்த புருஷோத்தமன், "ஆனால்!" என்றான்.

கருணா.—ஆனாலென்ன?

புருஷோ:—உன்னை முகமூடி மனிதன் நிராயுதபாணியாக வல்லவோ வரும்படி கூறி யிருக்கிறான்?

கருணாகரன், "எனக்கு அது தெரியும், நான் கூறுவதைக் கேள்," என்று சொல்லிய வண்ணம் தன்னிரு கெட்டித்த துப்பாக்கிகளையும் புருஷோத்தமன் கையில் கொடுத்து, "நீ, இவைகளை உன் பையில் வைத்துக் கொள். ஏனெனில் இப்போது நாம் அங்கே போனால் கட்டாயம் முகமூடி என்னைச் சோதனை செய்து பார்ப்பான். அப்பொழுது இந்த நான்கு சிகரெட்டுக்களையும் தவிர, வேறு ஒரு ஆயுதத்தையும் என்னிடம் அவன் காண முடியாது. ஆனால் நான் சொல்வதை இப்பொழுது கவனி!—நான் 'துப்பாக்கிகள்' என்று உன்னைக் கேட்கும்போது உடனே நீ தயங்காமல் இந்த இரு துப்பாக்கிகளையும் என்னிடம் கொடுக்கவேண்டும். இதை மாத்திரம் ஞாபகம் வைத்துக்கொள். மீதியை நான் பார்த்துக்கொள்ளுகிறேன். தெரிகிறதா!" என்று கூறினான்.

புருஷோத்தமன் 'சரி' என்று கூற உடனே யிருவரும் கீழே இறங்கினார்கள்.

வாசலில் நிறுத்தப்பட்டிருந்த புருஷோத்தமன் காரில் இருவரும் ஏறியுட்கார கார் உடனே புறப்பட்டது. உடனே கருணாகரன்—கார் புறப்பட்டுப் போய்க்கொண்டிருக்கும் பொழுது கருப்பு அங்கியையும், முகமூடியையும் அணிந்து கொண்டான். அப்பொழுது சுமார் இரவு 9½ மணி யிருக்குமாகையால் வீரமார்த்தாண்டனை யாரும் கவனிக்கவில்லை. கருணாகரன் இருப்பிடத்தில் வீரமார்த்தாண்டனைக் கண்ட புருஷோத்தமன், திகிலும், ஆச்சரியமும் ஒருங்கே யடைந்தான். அப்பொழுது அவனுக்குத் தன்னை யறியாமல் வீரமார்த்தாண்டனிடம் ஒரு மதிப்பும், மரியாதையும் ஏற்பட்டன.

சிறிது நேரத்தில் தோப்பைச் சேர்ந்த பங்களாவை யடைந்தது, கார். அப்பொழுது அந்த விடத்தைப் பார்த்த வீரமார்த்தாண்டன், அந்த விடம் சந்தடியறறிருந்ததைக் கண்டான். ஆகவே போலீசார் பிணங்களை அப்புறப்படுத்திக் கொண்டு போய் விட்டார்களென்பதைத் தெரிந்து கொண்டான்.

அப்பொழுது அவ் வீட்டின் வாயிற்புறக் கதவைத் திறந்துகொண்டு இரண்டு முரட்டு மனிதர்கள் வெளி வந்தார்கள். இவர்களுடைய வருகைக்காக எதிர்பார்த்தவர்கள்போல் காணப்பட்ட இருவரும் இவர்களை உள்ளே வரும்படி யழைத்தார்கள்.

இது மிகவும் அபாயகரமான காரியமாக வீரமார்த்தாண்டனுக்குப் பட்டது. தான் மிகவும் ஜாக்கிரதையா யிருக்க வேண்டுமென்றும், எந்த நிமிஷத்திலும் எப்பேர்ப்பட்ட அபாயத்தைச் சமாளிப்பதற்குத் தான் தயாராக விருக்க வேண்டுமென்றும் நினைத்தான்.

'இது வரையில் நடந்த விஷயங்களின் மூலம் முகமூடிக்கு வீரமார்த்தாண்டன் மீது அபாரமான ஆத்திரமும், அருவையும் தோன்றி யிருக்கலாம்! யார் கண்டது.'

(தொடரும்.)

# சித்திரபானுவருஷ ஆடிமீ நவக்கிரக நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 6-மணிக்கு)

| தேதி | சந்திர ஹோரை | | | சூரியன். | | சந்திரன். | | அங்காரகன். | | புதன் | | குரு. | | சுக்ரன். | | சனி. | | ராகு. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | வி | ச. | பா. | க. | பா. | க | பா. | க. | பா. | க | பா. | க. | பா. | க. | பா | க | பா. | க |
| 1 | 19 | 32 | 46 | 89 | 43 | 117 | 18 | 117 | 13 | 75 | 48 | 73 | 49 | 59 | 10 | 45 | 31 | 133 | 05 |
| 2 | 19 | 36 | 42 | 90 | 40 | 131 | 36 | 117 | 51 | 77 | 24 | 74 | 03 | 60 | 21 | 45 | 38 | 133 | 02 |
| 3 | 19 | 40 | 39 | 91 | 86 | 144 | 34 | 118 | 29 | 79 | 00 | 76 | 17 | 61 | 32 | 45 | 44 | 32 | 59 |
| 4 | 19 | 44 | 35 | 92 | 32 | 157 | 33 | 119 | 07 | 80 | 36 | 74 | 31 | 62 | 44 | 45 | 51 | 132 | 55 |
| 5 | 19 | 48 | 32 | 93 | 29 | 171 | 07 | 119 | 44 | 82 | 12 | 74 | 34 | 63 | 55 | 45 | 57 | 132 | 52 |
| 6 | 19 | 52 | 28 | 94 | 26 | 184 | 40 | 120 | 22 | 83 | 48 | 74 | 58 | 65 | 07 | 46 | 04 | 132 | 49 |
| 7 | 19 | 56 | 25 | 95 | 23 | 198 | 37 | 121 | 00 | 85 | 29 | 75 | 11 | 66 | 18 | 46 | 10 | 132 | 46 |
| 8 | 20 | 00 | 21 | 96 | 20 | 212 | 33 | 121 | 38 | 87 | 11 | 75 | 25 | 67 | 29 | 46 | 17 | 132 | 43 |
| 9 | 20 | 04 | 18 | 97 | 17 | 226 | 50 | 122 | 16 | 88 | 58 | 75 | 38 | 68 | 40 | 46 | 24 | 132 | 40 |
| 10 | 20 | 08 | 15 | 98 | 14 | 241 | 07 | 122 | 54 | 90 | 46 | 75 | 52 | 69 | 52 | 46 | 31 | 132 | 36 |
| 11 | 20 | 12 | 12 | 99 | 11 | 255 | 30 | 123 | 31 | 92 | 3[illegible] | 76 | 05 | 70 | 03 | 46 | 37 | 132 | 33 |
| 12 | 20 | 16 | 08 | 100 | 08 | 269 | 52 | 124 | 09 | 94 | 21 | 76 | 18 | 72 | 15 | 46 | 44 | 132 | 30 |
| 13 | 20 | 20 | 05 | 101 | 05 | 283 | 56 | 124 | 47 | 96 | 08 | 76 | 31 | 73 | 26 | 46 | 50 | 132 | 27 |
| 14 | 20 | 24 | 01 | 102 | 03 | 298 | 00 | 125 | 25 | 97 | 56 | 76 | 44 | 74 | 38 | 46 | 57 | 132 | 24 |
| 15 | 20 | 27 | 58 | 103 | 00 | 311 | 46 | 126 | 02 | 99 | 43 | 76 | 57 | 75 | 49 | 47 | 03 | 132 | 21 |
| 16 | 20 | 31 | 54 | 103 | 57 | 325 | 32 | 126 | 40 | 101 | 31 | 77 | 11 | 77 | 01 | 47 | 10 | 132 | 17 |
| 17 | 20 | 35 | 51 | 104 | 54 | 338 | 47 | 127 | 18 | 103 | 19 | 77 | 24 | 78 | 13 | 47 | 16 | 132 | 14 |
| 18 | 20 | 39 | 47 | 105 | 51 | 352 | 01 | 127 | 56 | 105 | 08 | 77 | 37 | 79 | 25 | 47 | 28 | 132 | 11 |
| 19 | 20 | 43 | 45 | 106 | 48 | 4 | 47 | 128 | 33 | 106 | 58 | 77 | 49 | 80 | 37 | 47 | 30 | 132 | 08 |
| 20 | 20 | 47 | 41 | 107 | 46 | 17 | 33 | 129 | 11 | 108 | 49 | 78 | 02 | 81 | 50 | 47 | 3[illegible] | 132 | 05 |
| 21 | 20 | 51 | 37 | 108 | 43 | 29 | 55 | 129 | 49 | 110 | 39 | 78 | 14 | 83 | 02 | 47 | 44 | 132 | 02 |
| 22 | 20 | 55 | 33 | 109 | 40 | 42 | 17 | 130 | 27 | 112 | 30 | 78 | 27 | 84 | 15 | 47 | 52 | 131 | 58 |
| 23 | 20 | 59 | 29 | 110 | 37 | 54 | 30 | 131 | 05 | 114 | 20 | 78 | 39 | 85 | 27 | 47 | 59 | 131 | 55 |
| 24 | 21 | 03 | 26 | 111 | 35 | 66 | 44 | 134 | 43 | 116 | 11 | 78 | 52 | 86 | 40 | 48 | 06 | 131 | 52 |
| 25 | 21 | 07 | 22 | 112 | 32 | 78 | 37 | 132 | 20 | 118 | 04 | 79 | 04 | 87 | 52 | 48 | 13 | 131 | 49 |
| 26 | 21 | 11 | 19 | 113 | 29 | 90 | 31 | 132 | 58 | 119 | 58 | 79 | 17 | 89 | 05 | 48 | 20 | 131 | 45 |
| 27 | 21 | 15 | 16 | 114 | 26 | 102 | 49 | 133 | 36 | 121 | 44 | 79 | 30 | 90 | 18 | 48 | 27 | 131 | 42 |
| 28 | 21 | 19 | 13 | 115 | 24 | 115 | 07 | 134 | 14 | 123 | 31 | 79 | 43 | 91 | 31 | 48 | 35 | 131 | 39 |
| 29 | 21 | 23 | 09 | 116 | 21 | 127 | 44 | 134 | 51 | 125 | 20 | 79 | 56 | 92 | 43 | 48 | 41 | 131 | 36 |
| 30 | 21 | 27 | 06 | 117 | 19 | 140 | 22 | 135 | 29 | 127 | 10 | 80 | 08 | 93 | 55 | 48 | 46 | 131 | 33 |
| 31 | 21 | 81 | 02 | 118 | 16 | 153 | 02 | 136 | 07 | 128 | 59 | 80 | 20 | 95 | 08 | 48 | 5[illegible] | 131 | 30 |
| 32 | 21 | 34 | 59 | 119 | 14 | 165 | 43 | 136 | 45 | 130 | 48 | 80 | 33 | 96 | 24 | 48 | 53 | 131 | 26 |

## ஆகாய காட்சி.

இம் மாதம் குறிப்பிடத் தக்கன எதுவும் சேருவதில்லை.

## சித்திரபானு௵ ஆவணிமீ நவக்கிரக நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 6-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | வி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 21 | 38 | 56 | 120 | 11 | 179 | 52 | 137 | 23 | 132 | 37 | 80 | 45 | 97 | 33 | 48 | 56 | 131 | 23 |
| 2 | 21 | 42 | 52 | 121 | 09 | 194 | 01 | 138 | 01 | 134 | 26 | 80 | 58 | 98 | 46 | 49 | 00 | 131 | 20 |
| 3 | 21 | 46 | 49 | 122 | 07 | 208 | 04 | 138 | 39 | 136 | 15 | 81 | 10 | 99 | 58 | 49 | 03 | 131 | 17 |
| 4 | 21 | 50 | 45 | 123 | 05 | 222 | 07 | 139 | 18 | 138 | 05 | 81 | 23 | 101 | 11 | 49 | 07 | 131 | 14 |
| 5 | 21 | 54 | 42 | 124 | 02 | 236 | 25 | 139 | 55 | 139 | 49 | 81 | 35 | 102 | 23 | 49 | 10 | 131 | 11 |
| 6 | 21 | 58 | 38 | 124 | 59 | 250 | 44 | 140 | 32 | 141 | 33 | 81 | 48 | 103 | 36 | 49 | 14 | 131 | 07 |
| 7 | 22 | 02 | 35 | 125 | 57 | 265 | 29 | 141 | 10 | 143 | 12 | 82 | 00 | 104 | 48 | 49 | 17 | 131 | 04 |
| 8 | 22 | 06 | 31 | 126 | 55 | 279 | 15 | 141 | 49 | 144 | 51 | 82 | 12 | 106 | 00 | 49 | 20 | 131 | 01 |
| 9 | 22 | 10 | 28 | 127 | 53 | 293 | 18 | 142 | 27 | 146 | 30 | 82 | 24 | 107 | 12 | 49 | 22 | 130 | 58 |
| 10 | 22 | 14 | 24 | 128 | 51 | 307 | 21 | 143 | 06 | 148 | 09 | 82 | 36 | 108 | 24 | 49 | 25 | 130 | 54 |
| 11 | 22 | 18 | 21 | 129 | 49 | 321 | 00 | 143 | 44 | 149 | 48 | 82 | 48 | 109 | 36 | 49 | 27 | 130 | 51 |
| 12 | 22 | 22 | 17 | 130 | 47 | 334 | 39 | 144 | 23 | 151 | 27 | 83 | 00 | 110 | 48 | 49 | 30 | 130 | 48 |
| 13 | 22 | 26 | 14 | 131 | 44 | 347 | 46 | 145 | 01 | 153 | 06 | 83 | 12 | 112 | 00 | 49 | 32 | 130 | 45 |
| 14 | 22 | 30 | 10 | 132 | 42 | 0 | 53 | 145 | 40 | 154 | 45 | 83 | 24 | 113 | 12 | 49 | 35 | 130 | 42 |
| 15 | 22 | 34 | 07 | 133 | 40 | 13 | 35 | 146 | 18 | 156 | 17 | 83 | 35 | 114 | 15 | 49 | 37 | 130 | 39 |
| 16 | 22 | 38 | 04 | 134 | 38 | 26 | 17 | 146 | 56 | 157 | 50 | 83 | 46 | 115 | 38 | 49 | 40 | 130 | 35 |
| 17 | 22 | 42 | 00 | 135 | 36 | 38 | 30 | 147 | 34 | 159 | 15 | 83 | 56 | 116 | 51 | 49 | 42 | 130 | 32 |
| 18 | 22 | 45 | 57 | 136 | 34 | 50 | 43 | 148 | 13 | 160 | 41 | 84 | 07 | 118 | 05 | 49 | 44 | 130 | 29 |
| 19 | 22 | 49 | 54 | 137 | 31 | 62 | 45 | 148 | 51 | 162 | 07 | 84 | 17 | 119 | 19 | 49 | 45 | 130 | 26 |
| 20 | 22 | 53 | 50 | 138 | 30 | 74 | 48 | 149 | 30 | 163 | 33 | 84 | 27 | 120 | 33 | 49 | 47 | 130 | 23 |
| 21 | 23 | 57 | 47 | 139 | 28 | 87 | 13 | 150 | 08 | 164 | 59 | 84 | 37 | 121 | 47 | 49 | 49 | 130 | 20 |
| 22 | 23 | 01 | 43 | 140 | 26 | 99 | 39 | 150 | 47 | 166 | 25 | 84 | 47 | 123 | 01 | 49 | 51 | 130 | 16 |
| 23 | 23 | 05 | 40 | 141 | 24 | 111 | 31 | 151 | 25 | 167 | 50 | 84 | 57 | 124 | 14 | 49 | 53 | 130 | 13 |
| 24 | 23 | 09 | 36 | 142 | 22 | 123 | 23 | 152 | 04 | 169 | 16 | 85 | 08 | 125 | 28 | 49 | 55 | 130 | 10 |
| 25 | 23 | 13 | 33 | 143 | 21 | 135 | 46 | 152 | 42 | 170 | 25 | 85 | 18 | 126 | 42 | 49 | 56 | 130 | 07 |
| 26 | 23 | 17 | 29 | 144 | 20 | 148 | 10 | 153 | 21 | 171 | 34 | 85 | 28 | 127 | 56 | 49 | 58 | 130 | 04 |
| 27 | 23 | 21 | 26 | 145 | 18 | 161 | 58 | 154 | 00 | 172 | 26 | 85 | 37 | 129 | 10 | 49 | 59 | 129 | 01 |
| 28 | 23 | 25 | 22 | 146 | 17 | 175 | 46 | 154 | 39 | 173 | 19 | 85 | 47 | 130 | 25 | 50 | 00 | 129 | 57 |
| 29 | 23 | 29 | 19 | 147 | 15 | 189 | 29 | 155 | 18 | 174 | 11 | 85 | 56 | 131 | 39 | 50 | 00 | 129 | 54 |
| 30 | 23 | 33 | 15 | 148 | 14 | 203 | 13 | 155 | 57 | 175 | 03 | 86 | 06 | 132 | 54 | 50 | 00 | 129 | 51 |
| 31 | 23 | 37 | 12 | 149 | 12 | 217 | 22 | 156 | 36 | 175 | 55 | 86 | 15 | 134 | 08 | 50 | 00 | 129 | 48 |

### ஆகாயக் காட்சி.

17-ந் தேதி முன் இரவு மணி-8. நிமிஷம் 41-க்கு பாகை-0. கலை-13. வடக்கில் சனி-சந்திர சமாகமம்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**சித்திரபானுௗ ஆவணி மீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865,**
**பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜரா 1361,**
**இங்கிலீஷ் 1942ௗ ஆகஸ்ட்டு மீ—செப்டம்பர் மீ**

| ஆவணி மீ | ஆகஸ்ட் (1942ௗ செப்டம்பர் மீ) | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங் | சஷ்55-49 | சித28-48 | பி28-48 அ | சஷ்டி விரதம், காதுகுத்த |
| 2 | 18 | செவ் | சப்51-1 | சுவா26-25 | சி26-25 அ | கரிநாள் |
| 3 | 19 | புத | அஷ்45-37 | விசா23-24 | சித்60 | சுப காரியங்கள் விலக்க |
| 4 | 20 | வியா | நவ40-48 | அ19-47 | சி19-47 பி | சுப காரியங்கள் விலக்க |
| 5 | 21 | வெள் | தச33-35 | கே15-36 | ம15-36 அ | வரலக்ஷ்மி விரதம் |
| 6 | 22 | சனி | ஏகா27-37 | மூல11-25 | சித்60 | புத்ராத ஏகாதசி |
| 7 | 23 | ஞா | து21-36 | பூரா7-12 | சி7-12 அ | தாமோதர துவாதசி |
| 8 | 24 | திங் | திர15-37 | உத்3-35 | ம3-35 அ | நடராஜர் அபிஷேகம் |
| 9 | 25 | செவ் | சது10-48 | திரு0-36 அவி57-36 | சி0-36 ம | யஜுர் உபாகர்மம், ஸ்ராவணம் |
| 10 | 26 | புத | ப○6-37 | சத55-11 | சி55-11 அ | சந்திரகிரஹணம் தெரியாது |
| 11 | 27 | வியா | பிர [illegible]-1 | பூர54-36 | சித்60 | சிராவண பகுளம் |
| 12 | 28 | வெள் | துதி0-2 திரு58-11 | உட்55-11 | சி55-11 அ | ஸ்வாகம், சிமந்தம், காதுகுத்த, ஏருவிட |
| 13 | 29 | சனி | சது58-11 | ரே56-25 | ம56-25 சி | கோ பூஜை |
| 14 | 30 | ஞா | பஞ்59-24 | அசு58-47 | சித்60 | |
| 15 | 31 | திங் | சஷ்60 | பர60 | சித்60 | |
| 16 | 1 | செவ் | சஷ்1-47 | பர※2-24 | சித்60 | |
| 17 | 2 | புத | சட5-24 | கிரு7-11 | அ7-11 சி | |
| 18 | 3 | வியா | அ9-35 | ரோ13-48 | மர60 | |
| 19 | 4 | வெள் | நவ14-23 | மிரு25-20 | சித்60 | |
| 20 | 5 | சனி | தச19-11 | திரு26-24 | சித்60 | |
| 21 | 6 | ஞா | ஏகா24-1 | புன32-25 | சித்60 | |
| 22 | 7 | திங் | து28-12 | பூச37-49 | சித்60 | |
| 23 | 8 | செவ் | திர31-47 | ஆய42-35 | சித்60 | |
| 24 | 9 | புத | சது34-12 | மக46-47 | சி46-47 அ | |
| 25 | 10 | வியா | அ●36-1 | பூ49-12 | சி59-12 ம | சர்வத்திர அ●, சூரியகிரஹணம், தெரியாது |
| 26 | 11 | வெள் | பிர35-25 | உத்49-47 | சி49-47 அ | பிரயாணம், காதுகுத்த |
| 27 | 12 | சனி | துதி33-36 | அஸ்49-48 | மர60 | ஸாம உபாகர்மம் |
| 28 | 13 | ஞா | திரு30-35 | சித்48-35 | சித்60 | கரிநாள் வராஹ ஜயந்தி. |
| 29 | 14 | திங் | சது27-1 | சுவா46 47 | அ46-47 ம | விநாயக சதுர்த்தி |
| 30 | 15 | செவ் | பஞ்22-12 | வி43-48 | ம43-48 சி | திதித்வயம், ரிஷிபஞ்சமி |
| 31 | 16 | புதன் | சஷ்17-25 | அ40-11 | சித்60 | கன்யா ரவி கா-55-13 ஏருவிட, பிரயாணம் |

| | | | |
|---|---|---|---|
| | | சனி | குரு |
| கே | 11-கன்-புதன் 19-சிம்ம-சுக் 20-கன்-அங் 31-கன்-சூரி | | சுக் |
| | | | பு-சூ அங் ராகு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

வெளிவந்துவிட்டது! வெளிவந்துவிட்டது!!

# ஆனந்தபோதினி பாவ ஸ்புட கணனம்

## ஜோதிடர்களுக்கு உற்ற தோழன்.

12 பாவங்களையும் எளிதில் ஸ்புடம் பண்ணி ஜாதகங்களைக் கணிப்பதற்கும், பல பாவ நிர்ணயங்களுக்கு முக்கியமாக வேண்டிய எல்லா விவரங்களையும் அறிவதற்கும் இது பேருதவியாக இருக்கும். ஜோதிட சாஸ்திரத்தில் சாதாரண ஞானமுடையவர்களுங் கூட, இப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு எளிதாகக் கணனங்களைச் செய்துகொள்ளலாம்.

**இதன் விலை ஒன்றரை ரூபாய்தான்.**

நவீன தமிழ் இலக்கியத்தில் ஒரு பெரிய
புரட்சியை யுண்டுபண்ணிய

"ஜீவா"வின்

# உயிரோவியம்

## (ஒரு உயர்ந்த காதல் சித்திரம்.)

தமிழ்நாட்டுச் சகோதர சகோதரிகள் பெரும்பாலோர் 'பிரசண்ட விகட'னில் தொடர்ந்து படித்து மகிழ்ந்து பாராட்டிய இச் சிறந்த கதை விரிவாகச் செப்பஞ் செய்யப்பெற்று, இப்போது புத்தக வடிவில் புத்தழகுடன் வெளிவந்திருக்கிறது.

"இதுகாறும் தமிழன்னையின் திருமேனியிலேயே கிடையாத ஒரு எழில்வாய்ந்த ஆடரணம் இது..........படித்துக் கொண்டு போவோரை ஒரு குலுக்குக் குலுக்குகின்றது அதன் முடிவு. ஏனெனில் இதுவரை எந்த கதாசிரியராலும் காணாத முடிவு.........ஒரு முறையல்ல; பல முறை படித்து இன்புறவேண்டிய கதை."

இவ்விதம் ஒரு சிறந்த சிறுகதை எழுத்தாளரே வியந்து புகழ்ந்திருக்கிறார். அவர்மட்டுமல்ல; இக் கதையைப் படித்த அறிஞர்கள், எழுத்தாளர்கள் அனைவருமே ஏகோபித்துப் பலபட பாராட்டி யிருக்கிறார்கள்.

**இதன் விலை அணா 12. (தபாற் செலவு அணா 5.)**

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாருமில்லை
என்மலடாய்ப் போவதென்று கேட்பாயாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங்கெட்டா
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால் [ல்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோரி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கருதரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



## சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

## குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும் குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0. தபாற்செலவு பிரத்தியேகம்.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# காப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், .சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை யெரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும். புட்டி 1-க்கு விலை ரூபா 1.

# ஜீ. கியூர்

## இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் ஏற்படும் கள்ளரோய். நீரடைப்பு சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக்கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தின் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக இருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியவை இரா. 3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை அணா 14.

# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய இடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும். புட்டி 1-க்கு விலை அணா 8.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# அயக்காந்த சத்தின் திராவகம்

இத்தத் திவ்ய ஔஷதம், விஷ சுரம் முதலிய எத்தகைய ஜுரத்தினும் தேகம் மெலிந்து வெளுத்துப்போனவர்களுக்கும், வேறு பல வியாதிகளால் தாக்கப்பட்டுப் பலமற்றுப் போனவர்களுக்கும், தாது விருத்தி நாட்டங்கொண்டு பல மருந்துகளைச் சாப்பிட்டு குணமடையாதவர்களுக்கு இது ஒரு அமிர்தமாகும் என்றே நிச்சயமாகக் கூறுவோம். இம்மருந்தை உட்கொள்வதால் மல ஜலம் தாராளமாய்க் கழிந்து பசியின்மையைப் போக்கி ஜீர்ண சக்தியைக் கொடுத்துப் பரிசுத்த இரத்தத்தைப் பெருக்கும். தாது விருத்தி உண்டாகும். தேகம் சிவப்படைந்து முகம் வசீகரமாகும்.



இம்மருந்தைச் சாப்பிடுகிறவர்கள் தேக திடத்தைப் பெற்று, வலிவுள்ள மக்களைப் பெறுவார்கள். சகல இன்பங்களையும் அநுபவிக்கலாம். ஆண்பெண் இருபாலரும் எப்பொழுதும் உபயோகிக்கலாம்.

பெரியவர்கள் ஒரு அவுன்ஸ் தண்ணீர் அல்லது பசும் பாலில் 10, 12 துளி வரையிலும், சிறியவர்கள் 2-முதல் 6, 7 துளிகள் வரையிலும் காலை மாலை இரு வேளையும் சாப்பிடவேண்டும். இதற்கு யாதொரு பத்தியமுமில்லை. எல்லா ஏழைகளும் வாங்கி உபயோகிக்கும்பொருட்டே மிகக் குறைந்த விலைக்கு விற்கிறோம். ஒரு மாதம் சாப்பிடக்கூடிய மருந்தின் விலை அணு 12. தபாற் செலவு வேறு.

# சிவப்பிரகாச பல் பொடி

இந்தச் சிவப்பிரகாச பல் பொடி மற்ற இதர பல்பொடிகளைப் போலிராமல், அதிக சுகந்தமாகவும், பல் வலி, பல்லில் சொத்தை, ஈறு வளர்ந்திருத்தல், வாய் ரணம், வாய் நாற்றம், பல்லாட்டம் முதலிய வியாதிகளை நீக்குவது மல்லாமல், பல் நன்றாய்த் துலங்கும்படிச் செய்யும். வாயில் சதா கம கம வென்னும் மணத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கும். ஒரு மாதத்திற்கு உபயோகிக்கக்கூடிய பல் பொடி டப்பி 1-க்கு விலை அணு 2.

6 டப்பிகள் அணு 10.



தனலட்சுமி கம்பெனி, கே. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒருவிதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினுலுண்டான பலவீனமும் இம்மருந்தினுல் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்ருது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சிவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒருமுறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும். புட்டி 1-க்கு விலை அணு 4. தபாற்கூலி வேறு.

# கண்நோய் மருந்து



இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல், சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மூக்கண்ணாடி போடுகிறவர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச்சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணுடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணு 8. தபாற்கூலி வேறு.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# நூதன தமிழ் நாவல்களும் கதைப்புஸ்தகங்களும்.

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினாபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரமபை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கி..வன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனாமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |